**அதிராவடிகள்**

i. மூத்த பிள்ளையார் திரு மும்மணிக்கோவை (தொ. எ. 2991 பார்க்க); ii. வி. உலகநாதப்பிள்ளை; சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. 1925 ; iv. செ.மூ.எ. 23; v. மூத்த பிள்ளையார் மீது அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் மூவகைப் பாக்களும் முறையே கலந்து வர முப்பது பாடல்களால் பாடப்பட்ட நூல். இருபத்து மூன்று பாடல்களே கிடைத்துள்ளன. viii. 1299/1925/III.

O31,1

**சாம்பசிவம் பிள்ளை, மா. திருச்சிராப்பள்ளி**

**2185.** i. திருத்தொண்டர் புராணமென்னும் பெரிய புராணத்தின் முதலாவது திருமலைச் சருக்கத்தில் சில ஆராய்ச்சி: முதற் பதிப்பு; ii. மா. சாம்பசிவம் பிள்ளை, திருச்சிராப்பள்ளி; ஜனுனுகூல அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி. iii. ஆகஸ்ட் 1922; iv. உ.ப. 12; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0 ; vii. திருத்தொண்டர் புராணத்தின் முதலாவதாகிய திருமலைச் சருக்கத்தின் ஆராய்ச்சி. மேற்படி சருக்கத்தின் முதல் நான்கு பகுதிகளைச் சேக்கிழார் பெருமான் திருவாக்கல்ல வென்பார் கொள்கையைத் தக்க சான்றுகளால் நியாயங்காட்டி மறுத்து உண்மை நன்கு விளக்கப்பட்டுள்ளது. சூரியனார் கோயிலாதீனம் முத்துக் குமார தம்பிரான் அவர்கள் தந்த முகவுரையுடன் கூடியது. viii. 627/1922/IV.

O31,1

**சேக்கிழார்**

**2186.** i. கண்ணப்ப நாயனார் புராணம்: முதற் பதிப்பு; ii. கே. ஆலாலசுந்தரம் பிள்ளை, காஞ்சி ; பி.எஸ்.எஸ்.பிரஸ், சூளை, சென்னை; iii. ஜூலை, 1921 ; iv. செ.மூ.உ.ப. 208 ; v. 25×14 செ.மீ.; vi. ........;vii. இந்நூல் பெரிய புராணத்தின் ஒரு பகுதி. மூலமும் விளக்கப் பொழிப்புரையும் அரும்பதவுரையும் தரப்பட்டுள்ளன. இவ்வுரையினை ஆக்கியவர் காஞ்சிபுரம் ஆலாலசுந்தரம் பிள்ளையாவார். viii. 1123/1921/III.

O31,1

**2187.** i. பெரிய புராணச் சருக்கம்—முதற்பகுதி: முதற்பதிப்பு ii. வி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1923; iv. செ.மூ.உ.ப. 207; v. 19×13 செ.மீ. ; vi. 0–14–0 ; vii. பெரிய புராணம் பாடப்பட்ட வரலாறு, பெரிய புராணச் சருக்கம், சில பெரிய புராணச் செய்யுட்கள் அருஞ்சொற்பொருள் முதலியன அடங்கியுள்ளன. viii. 1251/1923/I.

O31,1

**2188.** i. *குலச் சிறை நாயனார் புராண மூலம்* : முதற் பதிப்பு ; ii. கே. ஏகாம்பரம் பிள்ளை, சென்னை; கணேச அச்சியந்திர சாலை, சென்னை ; iii. 1923 ; iv. செ.மூ.உ.எ. 11 ; v. 17×12 செ.மீ.; vi. 0–2–0; vii. குலச சிறை நாயனாரைப் பற்றிய சரித்திரம் பாடல்களில் அமைந்துள்ளது. விரிவுரை யும், ஞான சம்பந்த மூர்த்தியின் தேவாரமும் காணப்படுகின் றன. பொழிப்புரை விசேடவுரைகளை ஆக்கியவர் காஞ்சி ஆலால சுந்தரம் பிள்ளையாவர். viii. 273/1923/IV.

O31, 1

**2189.** i. பெரியபுராணம்—இலைமலிந்த சருக்கம் மூலம்; முதற் பதிப்பு; ii. சி. ஏகாம்பரம் பிள்ளை, சென்னை, கணேச அச்சுக் கூடம், சென்னை ; iii. 1923 ; iv. செ.மூ.ப. 306 ; iv. 24×15 செ.மீ. v. 2–8–0 ; vi. ஆலாலசுந்தரம் பிள்ளையவர்களி யற்றிய பொழிப்புரையும் விசேட வுரையும் அடங்கியது. எறி பத்த நாயனார், ஏனாதி நாயனார், கண்ணப்ப நாயனார், குங்கி லியக் கலய நாயனார், மானக்கஞ்சாற நாயனார், அரிவாட்டாய நாயனார், ஆனாய நாயனார் ஆகியோர் வரலாறுகள் அடங்கியது. முன்னுரையில் நாயன்மார்களைப் பற்றிய குறிப்பும் உளது. viii. 1463/1923/IV.

O31, 1

**2190.** i. பெரிய புராணம்—முதற்காண்டம் முதற் பதிப்பு ii. கே. ஏகாம்பரப் பிள்ளை, சென்னை ; கணேச அச்சியந்திர சாலை, சென்னை ; iii. 1924 ; iv. செ.மூ.உ.ப. 230; v. vi. 24×16 செ.மீ. ; vi. 2–4–0 ; vii. பெரிய புராணத்தின் முதற்காண்டம் திருமலைச் சருக்கம் மூலமும் உரையும் அடங்கி யுளது. இதனுள் அவையடக்கம் பாயிரச் சிறப்பு, திருக்கயி லாயச் சிறப்பு, திருவாரூர் நகர சிறப்பு, தடுத்தாட்கொண்ட புராணம் முதலியன உள. ஆலாலசுந்தரம் பிள்ளை இதற்கு உரை எழுதியுள்ளார். viii. 46/1924/II.

O31, 1

**திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் முதலியோர்**

**2191.** i. நாகப்பட்டினம் தேவாரமும் திருப்புகழும் : முதற் பதிப்பு ; ii. அ.மு. சாமிநாத செட்டியார், நாகை; பியர்லெஸ் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர் 1920 ; iv. செ.மூ.ப.18; v. 19×12 செ. மீ.; vi. 0–1–0; vii. இந்நூலில் மூவர் தேவாரங்களிலிருந்து சில பதிகங்களும், அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழிலிருந்து சில பாடல்களும் எடுத்துத் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன. இவை நாகப்பட்டினத்துப் பெரு மானைத் துதிப்பனவாம். viii. 132/1921/I.

O31, 1

**2192.** i. நால்வர்கள் அருளிச் செய்த தேவாரத் திரட்டு: முதற் பதிப்பு ii. டி.எஸ்.ராமானுஜம் ஐயங்கார், திருவொற்றியூர் ; ஸ்ரீராமானுஜம் அச்சுக்கூடம், திருவொற்றியூர்; iii. அக்டோபர்,

1921 ; iv. செ.மூ. ப. 47 ; v. 18×11 செ.மீ.; vi. 0–2–0; vii. சைவசமயக் குரவர்களாகிய அப்பர், சுந்தரர், மணிவாசகர், ஞானசம்பந்தர் இவர்கள் அருளிச் செய்த தேவார, திருவாசகப் பாடல்கள் இதன்கண் தொகுக்கப்பட்டுள்ளன. திருப்புகழின் ஒரு பாடலும் நால்வர் துதியும் நூலின் இறுதியிற் காணலாம்; viii. 40/1921/IV. O31,1

2193. i. தேவாரத் தோத்திரத் திரட்டு: முதற் பதிப்பு; ii. பீ. ஆதி மூல முதலி, சென்னை; ஆதிமூலம் பிரஸ், சென்னை; iii. 1922; iv. செ.மூ. ப. 160; v. 14×11 செ.மீ., vi. 0–6–0 ; vii. சைவ சமயாசாரியர்களாகிய நால்வரது சரித்திரமும், நால்வருந் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருவாசகத் திருமுறைகளினின்றும் இராமலிங்க சுவாமி திருவருட்பாவிலிருந்தும் தெரிந்தெடுக்கப்பட்ட செய்யுட்டிரட்டும் இதன்கண் அடங்கியுள்ளன. viii. 908/1922/I. O31,1

2194. i. பன்னிருதிருமுறைத் திரட்டு : முதற்பதிப்பு ; ii. எஸ்.எஸ். சக்ரபாணி பிள்ளை, திண்டிவனம் ; ஸ்ரீ கிருஷ்ண விலாசம். பிரஸ், திண்டிவனம் ; iii. 1922 ; iv. செ. மூ. ப. 14 ; v. 15×14 செ. மீ. ; vi. . . . . . . . . . , vii. பன்னிரு திருமுறைகளில் இருந்து திரட்டப்பெற்ற பக்திப் பாடல்களும் மாணிக்கவாசக சுவாமிகளுடைய திருவெம்பாவை இருபது தோத்திரப் பாடல்களும் கொண்டது இந்நூல். நித்திய வழி பாட்டிற்குப் பயன்படும் பொருட்டு இத்தொகுப்பு அமைக்கப் பெற்றது. viii. 147/1923/ I. O31,1

2195. i. தேவாரப் பன்னிரு திருமுறைத் திரட்டும் திருப்புகழும் : முதற் பதிப்பு ; ii. ரு. வி. இராஜரத்தினம் செட்டியார்; சென்னை ; வித்வ ரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1923 ; iv. செ. மூ. ப. 516 ; v. 18×13 செ. மீ. vi. 1–8–0 ; vii. இது, பன்னிரு திருமுறையில் சைவ சமய நாற்குரவர் இயற்றியனவும், அருணகிரி நாதர் இயற்றிய திருப் புகழும் கூடிய தொகுப்பாகும். அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகரின் திருவுருவப் படங்களும் ஆராய்ச்சியுரையும் நூல் முதலில் அமைந்துள்ளன. சித்தாந்தப் பத்திராதிபர் சி. குப்புசாமி என்பார் இதற்கு மதிப்புரை வழங்கியுள்ளார். இதனை ராஜரத்தினஞ் செட்டியார் தொகுத்துள்ளார். viii. 592/1923/I. O31,1

2196. i. தேவாரத் தோத்திரத் திரட்டு : முதற்பதிப்பு ; ii. சி. வைத்தியலிங்கம் பிள்ளை, கோவில்பட்டி ; சரஸ்வதி அச்சுக் கூடம், கோவில்பட்டி ; iii. 1923 ; iv. செ. மூ. ப. 12 ; v. 21×14 செ. மீ,. vi. . . . . . . . . . vii. கோவில்பட்டி, வேம்பத்தூர் வேளாளர் பால்ய அபிவிருத்தி சங்கச் சார்பாக வெளியிடப்பட்ட நூல் இது. இதில் மாணவர் மனப்பாடம்

செய்தற்குரிய இறைவணக்கச் செய்யுட்களும், நாற்பது திருக் குறட்பாக்களும் பிறவும் அடங்கியிருக்கின்றன. தேவாரப் பாசுரங்கள் சிலவும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. சி. வைத்திய லிங்கம் பிள்ளையவர்கள் இதனைத் தொகுத்துப் புத்தகமாகத் தந்துள்ளார். **viii.** 897/1923/II. O31,1

**2197.** தேவாரத் தோத்திரத் திரட்டு ; திருந்திய ஆறும் பதிப்பு ; **ii.** பி. நா. சிதம்பர முதலியார், சென்னை; வித்தியாரத்நாகர அச்சுக் கூடம், சென்னை, **iii.** 1923 ; **iv.** செ. மூ. ப. 160; **v.** 13×11 செ. மீ. ; **vi.** 0–6–0 ; **vii.** திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த தேவாரப் பதிகங்களைக் கூறும் இப்புத்தகத்தின் முன் பகுதியில் திருஞான சம்பந்தரின் வாழ்க்கைச் சரித்திரம் கொடுக்கப்பட்டுள்ளது. இதில் சைவாசாரியராகிய நால்வரின் சரித்திரமும், நால்வரும் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பாடல்களும் காணலாம். தாயுமான சுவாமிகள் இராமலிங்க சுவாமிகள் ஆகியோர் பாடல்களிலிருந்தும் சிற்சில கவிகள் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளன. **viii.**1447/1923/IV. O31,1

**2198. i.** தேவாரத் திரட்டு; **ii.** சி. ஏ. சிவபூஷண முதலி, திருவள்ளூர் ; ஆனந்தா பிரிண்டிங் ஒர்க்ஸ், திருவள்ளூர்; **iii.** 1923 ; **iv.** செ. மூ. ப. 160 ; **v.** 13×12 செ. மீ. ; **vi.** 0–6–0 ; **vii.** சைவ சமயாசாரியார்கள் நால்வரும் அருளிச் செய்த பக்திப் பாடல்களில் சிலவும் அவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. தாயுமானவர், இராமலிங்கர் பாடல்களும் இணைக்கப்பட்டுள்ளன. **viii.** 647/1924/I. O31,1

**2199. i.** டாண்டிப் பதிகம் ; முதற்பதிப்பு ; **ii.** ரா. ம. சுப்பிரமணிய பிள்ளை, ஆத்தூர் ; ஸ்ரீராமாநுஜம் பிரஸ், தென்காசி ; **iii.** 1925 ; **iv.** செ. மூ. ப. 8 ; **v.** 22 14 செ. மீ. ; **vi.** 0–1–0 ; **vii.** மூவர் பாடிய தேவாரத் திரட்டிலிருந்து தொகுக்கப்பட்ட பாடல்கள் கொண்டது. இதில் திருச் சுழியல், திருப்பூவணம் ஆகிய திருத்தலங்கள் மீது பாடப் பெற்ற பாடல்கள் அடங்கியுள. **viii.** 343/1925/II. O31,1

**2200. i.** பாண்டிப்பதிகம்: முதற் பதிப்பு ; **ii.** ரா. ம. சுப்பிரமணிய பிள்ளை, ஆத்தூர் ; ஸ்ரீராமாநுஜம் பிரஸ், தென்காசி; **iii.** 1925 ; **iv.** செ. மூ. ப. 16 ; **v.** 22×14 செ. மீ. ; **vi.** 0-2-0 ; **vii.** திருக்கானப்பேர், திருவாடானை, திருவிராமேச்சுரம், திருப்புனவாயில், திருப்புத்தூர் ஆகிய திருத்தலங்கள் மீது பாடப் பெற்ற பாடல்கள் அடங்கியுள்ளன. **viii.** 344/1925/II. O31,1

**மகாதேவ முதலியார், வா.**

**2201. i.** பெரிய புராண ஆராய்ச்சி : முதற் பதிப்பு ; **ii.** வா. மகாதேவ முதலியார், சென்னை; கலா நிலையம் பிரஸ், சென்னை; **iii.** 1924; **iv.** உ.ப. செ.மூ.ப. 172; **v.** 18×13 செ.மீ.; **vi.** 1–0–0;

vii. பெரிய புராணத்துத் தொட்ட தொட்டவிடங்களிலெல்லாம் நயம் பல உள வென்னும் உண்மையைப் பலரும் உணரும்படிக் கூறுவதே இப்புத்தகத்தின் தலையாய கருத்தாகும். இதில் நூலாசிரியர் வரலாறு, நூற் பெயர், காலம் முதலியன பற்றிய ஆராய்ச்சியும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1220/1924/III. O31,1

**மாணிக்க வாசகர் & திருஞான சம்பந்தர்**

**2202.** i. திருவடிப் புகழ் மாலை: முதற் பதிப்பு; ii. தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்; திருநெல்வேலி; கி. முனிசாமி முதலியார் பிரிண்டர்ஸ், சென்னை; iii. 1923; iv. செ. மூ. ப. 27; v. 19×13 செ. மீ; vi. ........; vii. திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி, திருநெல்வேலித் தேவாரப் பதிகம் முதலியன அடங்கியுள்ளன. திருவடிப் புகழ் மாலைத் தொடர் வெளியீடுகளில் இது மூன்றுவது. மாணிக்க வாசகரின் சரித்திரச் சுருக்கம் நூல் முதலில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 1034/1924/I. O31,1

**மாணிக்கவாசக சுவாமிகள்**

**2203.** i. திருவாசகம்: முதற் பதிப்பு; ii. பி. இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை; திருமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1924; iv. செ. மூ. ப. 286; v. 14×11 செ. மீ.; vi. 0–4–0; vii. சைவ சமய நாற் குரவரிலொருவராகிய மாணிக்க வாசகர் திருத்தலங்கள் தோறும் சென்று பாடிய பக்திச் சுவைமிக்க பாடல்கள் கொண்டது. இதில் ஆசிரியரது வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கமும் உள்ளது. திருவாசகத்தின் பதிக அட்டவணை நூலிறுதியில் சேர்க்கப் பெற்றுள்ளது. viii. 1103/1925/I. O31,1

**2204.** i. திருவாசகம்-பிரார்த்தனைப் பத்து; இரண்டாவது பதிப்பு; ii. வி. எஸ். கிருஷ்ண ஸ்வாமி அய்யர், விளாத்திகுளம்; மீனலோசனி அச்சியந்திர சாலை, மதுரை; iii. 1925; iv. செ. மூ. எ. 11; v. 18×13 செ. மீ.; vi. 0–2–0; vii. மாணிக்க வாசக சுவாமிகள் திருப்பெருந்துறையில் அடியவர் கூட்டத்துடன் உறைந்துவரும் நாளில், சிவ பெருமான் ஆணைக் கேற்பச் சிதம்பரஞ் சென்றனர். அங்கே மாணிக்க வாசகர் சிவபெருமானைக் குறித்து பக்தியோடு சில பிரபந்தங்களையும் பதிகங்களையும் பாடினர். அவற்றில் ஒன்று இந்நூல். viii. 406/1925/III. O31,1

**2205.** i. திருவெம்பாவை: முதற்பதிப்பு; ii. தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கம், திருநெல்வேலி; மீனாக்ஷியா பிரிண்டிங் பிரஸ், திருநெல்வேலி; iii. 1925; iv. செ. மூ. எ. 20;

v. 14×11 செ. மீ.; vi. இலவசம்; vii. மாணிக்கவாசக சுவாமிகள் கன்னிப் பெண்கள் அனுட்டிக்கும் "பாவை நோன்பு என்னும் விரதத்தைப் பொருளாகக் கொண்டு பாடிய சிவனது பெருமையைக் கூறும் பாடல்கள் கொண்டது; viii. 1435/1925/I. O31,1

## 894. 8111 திவ்வியப் பிரபந்தம்

### ஆண்டாள்

**2206.** i. திருப்பாவை: முதற் பதிப்பு; ii. வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார், சென்னை; கணேச அச்சுக் கூடம், சென்னை; iii. 1922; iv. செ. மூ. உ. எ. 30; v. 21×14 செ. மீ.; vi. 0-6-0; vii. நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலிருந்து தொகுக்கப் பெற்ற பக்திப் பாடல்கள் அடங்கியது; வியாக்கியானங்களைத் தழுவி எழுதப் பெற்ற உரையுடன் அமைந்துள்ளது. இவ்வுரையினை எழுதியவர் வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார்; viii. 275/1923/I. O31,1

**2207.** i. திருப்பாவை: முதற் பதிப்பு; ii. கு. கோவிந்தசாமி நாயகர், சென்னை; டி. வி. சி. பிரஸ், சென்னை; iii. 1924; iv. செ. மூ. உ. ப. 67; v. 19×13 செ. மீ.; vi. ......; vii. பல ஏட்டுப் பிரதிகளைத் தழுவிய பிரதிபத அர்த்தத்துடனும், பொழிப்புரையுடனும் கூடியது; திருப்பள்ளியெழுச்சியும், திருப்பாவையின் கருத்தும் நூலின் இறுதியில் தரப்பட்டுள்ளது. viii. 353/1925/I. O31,1

**2208.** i. ஆண்டாள் திருப்பாவை: சுத்தப் பதிப்பு; ii. சாரதா புத்தகசாலை; புவனேஸ்வரி அச்சுக் கூடம், சென்னை; iii. 1924; iv. செ. மூ. எ. 3+30+3; v. 12×9 செ. மீ.; vi. 0-2-0; vii. ஆண்டாளின் வரலாறும் படமும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 668/1925/I. O31,1

**2209.** i. திருப்பாவை: முதற் பதிப்பு; ii. பி. கிருஷ்ணமாசாரியர்; கோல்டன் பிரஸ், சென்னை; iii. 1925; iv. செ. மூ. எ. 2+30; v. 16×12 செ. மீ.; vi.........; vii. ஆண்டாளருளிச் செய்த இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பாவால் ஆன, ராக, தாள அமைப்புடன் கூடியது; பராசர பட்டரும், உய்யக் கொண்டாரும் இயற்றிய இரு பாடல்களை முன்னுரையாகக் கொண்டது; viii. 733/1925/I O31,1

**2210.** i. நாச்சியார் திருமொழி: முதற் பதிப்பு; ii. தி. அ. எதிராஜ தாஸன், குன்னூர்; நீயூ ஆல்பியன் பிரஸ், குன்னூர்; iii. மே, 1921; iv. செ. மூ. ப. 8; v. 15×11 செ. மீ.; vi. இலவசம்; viii. ஆண்டாளின் திருமொழிகள் சில இதில் தொகுத்துத் தரப் பட்டுள்ளன; viii. 609/1921/II.

O31,1

2211. **i.** நாச்சியார் திருமொழி : முதற் பதிப்பு ; **ii.** எஸ். சின்ன சாமய்யா, சென்னை ; சித்தர் பிரஸ், சென்னை ; **iii. 1924 ; iv.** செ.மூ.+உ.ப. **95+124; v.** $25 \times 17$ செ.மீ.; **vi. 0–4–0 ; vii.** கோதை அருளிச் செய்த, "நாச்சியார் திருமொழி" இது. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கரசாரியரால் முன்னோருரைகளை முற்றுந் தழுவி இலக்கண முறைமைக் கிணங்கும் வகையால் எல்லார் தமக்கும் இன்பம் பயக்குமாறு எளிய நடையில் தெளிய எழுதப்பட்ட திவ்ய பிரபந்த திவ்யார்த்த தீபிகை என்னும் உரையுடன் கூடியது; **viii. 1243/1924/III.**

**O31,1**

**i.** நாச்சியார் திரு மொழியின் ஆறும் திருமொழி–வாரண மாயிரம் : முதற்பதிப்பு (தொ. எ. **2209** பார்க்க) ; **ii.** பி. கிருஷ்ணமாசாரியர்; கோல்டன் பிரஸ், சென்னை ; **iii. 1925 ; iv.** செ. மூ. எ. **1+11 ; v.** $16 \times 12$ செ. மீ. ; **vi.** . . . . ; **vii.** மாயவன்றன்னை மணஞ் செய்யக் கண்ட நற்கனவைத் தோழிக்குரைத்தல். கலி விருத்தப் பாவில் அமைந்தது. ராக தாள அமைப்புடன் கூடியது; **viii. 733/1925/I.** **O31,1**

## திருமங்கையாழ்வார்

2212. **i.** திருக்குறுந் தாண்டகம், திரு நெடுந் தாண்டகம் : முதற் பதிப்பு ; **ii.** அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள்; ஸ்ரீநிகேதன முத்ராக்ஷர சாலை, சென்னை ; **iii.** அக்டோபர், **1922 ; iv.** செ. மூ., ப. **24 ; v.** $12 \times 9$ செ. மீ. ; **vi. 0–2–0 ; vii.** வைணவ மதத் தோத்திரப்பாக்களான திருக் குறுந்தாண்டகம், திரு நெடுந்தாண்டகம் இவையிரண்டும் தொகுக்கப்பட்ட நூல்; **viii. 797/1922/IV.** **O31,1**

## திருவரங்கத்தமுதனார்

2213. **i.** இராமாநுஜ நூற்றந்தாதி : முதற் பதிப்பு ; **ii.** அண்ணங்கராசாரியர் ; ஸ்ரீநிகேதன அச்சுக் கூடம், சென்னை ; **iii.** அக்டோபர், **1922 ; iv.** செ. மூ. எ. **107 ; v.** $12 \times 9$ செ. மீ. ; **vi. 0–1–0 ; vii.** திருவரங்கத்தமுதனார் அருளிச் செய்த "ப்ரபன்ன காயத்திரி" என்னும் ராமானுஜ நூற்றந்தாதி ஸ்ரீமத்ராமானுஜர் மீது பாடப்பட்ட தோத்திர அந்தாதிப்பாக்களால் ஆகிய இந்நூலில் இயல் சாற்றும், சாற்று முறையும் அமைந்துள்ளன; **viii. 799/1922/IV.** **O31,1**

## தொண்டரடிப்பொடியாழ்வார்

**i.** திருப்பள்ளியெழுச்சி : முதற் பதிப்பு (தொ. எ. **2209** பார்க்க) ; **ii.** பி. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகள் ; கோல்டன் பிரஸ், சென்னை ; **iii. 1925 ; iv.** செ. மூ. எ. **2+10; vii.** எண்சீர் கழிநெடிலடியாசிரிய விருத்தப் பாவால் அமைந்த பத்துப் பாடல்கள் கொண்டது; ஆழ்வாரின் ஐதிகப்

படத்துடன் கூடியது. "அரங்கத்தம்மா பள்ளி யெழுந்தரு ளா.மெ" என்று அரங்கநாதரைப் பள்ளியுணர்த்துவதாக அமைக்கப்பட்ட பாடல்கள் நிறைந்தது; viii. 733/1925/I.
O31,1

2214. i. திருமலை முதலிய பாசுரங்கள்: முதற்பதிப்பு; ii. அண்ணங்கராசாரியார், ஸ்ரீநிகேதன அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1922; iv. செ. மூ. ப. 71; v. 12×9 செ.மீ.; vi. 0—1—6; vii. வைணவ தோத்திரப்பாக்களான திருமாலை, திருமந்திரம், திருமலை, திருவல்லிக்கேணி, திரு வாய்மொழி ஆகிய பாசுரங்களின் மூலம் தொகுக்கப்பட்ட நூல். viii. 890/1922/IV.
O31,1

## நம்மாழ்வார், குருகூர்

2215. i. திருவாய் மொழி: இரண்டாம் பதிப்பு; ii. கே. கிருஷ்ணமாசாரியார், சென்னை; நோபில் அச்சுக்கூடம், சென்னை; iii. 1924; iv. செ.மூ.எ. 1102; v. 22×14 செ.மீ.; vi. 1—0—0; vii. நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழி யின் மூலச் செய்யுட்கள் கொண்டது; இதில் அவரது வரலாற் றுச்சுருக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது; செய்யுளகராதியும் பின் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளது; viii. 1611/1924/IV.
O31,1

2216. i. திருவாய்மொழி ஈட்டின் பிரமாணத் திரட்டு: முதற் பதிப்பு; ii. டி. டி. இராமசாமி ராமாநுஜதாஸ், குடந்தை; திருக் கோமளாம்பிகா பிரஸ், திருக்குடந்தை; iii. நவம்பர் 1924; iv. உ. ப. 191; v. 22×14 செ. மீ.; vi. 0—12—0; vii. திருவாய்மொழி ஈடு எனப்படும் முப்பத்தாறாயிரம்படி வியாக்கியானத்தில் உள்ள பிரமாணங்களின் ஆதாரமும் அவற் றிற்கான பதவுரையும் கொண்டது. முதல் மூன்று பத்துக்கள் இதில் உள. viii. 1296/1924/IV.
O31,1

## பெரியாழ்வார் முதலியோர்

2217. i. திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை முத லியன: முதற் பதிப்பு; ii. துரைசாமி முதலியார், சென்னை; ஆதிமூலம் பிரஸ், சென்னை; iii. 1923; iv. செ.மூ.ப. 62; v. 13×9 செ.மீ.; vi. 0—2—0; vii. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலிருந்து பாடுவதற்காகத் தேர்ந்து எடுக்கப் பட்ட பாடல்கள் அடங்கிய நூல், இதில் பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டு, தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளி யெழுச்சி, ஆண்டாள் பாடிய திருப்பாவை, வாரணமாயிரம் எனனும் பாசுரங்கள், மதுரகவியாழ்வார் பாடிய கண்ணிநுண் சிறுத்தாம்பு, ஆகியவையும் சாத்து முறை தனியன்களும் இதில் அடங்கியுள்ளன; vii. 605/1923/III.
O31,1

i. திருப்பல்லாண்டு : முதற்பதிப்பு; (தொ. எ. 2209 பார்க்க) ii. பி. கிருஷ்ணமாசாரியஸ்வாமி, கோல்டன் பிரஸ், சென்னே; iii. 1925 ; iv. செ.மூ.எ. 3×12; v ....... vii. பெரியாழ்வார் அருளிச் செய்த திருப்பல்லாண்டு அடிக் குறிப்புகளுடன் கூடியது. நாத முனிகளும், பாண்டிய பட்ட ரும் அருளிச் செய்த செய்யுட்களே முதலிற் கொண்டது.
vii 733/1925/I. O31,1

திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, ஆண்டாள் சரித்திரம் கண்ணிநுண் சிறுத்தாம்புடன் திருப்பாவை: முதற் பதிப்பு; (தொ. எ. 2209 பார்க்க); ii. பி. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகள், கோல்டன் பிரஸ், சென்னே ; iii. 1925 ; iv. செ.மூ.உ.ப. 40 ; v. 16×12 செ. மீ. ; vi. 0—2—0 ; vii. இது சாத்து முறை தனியன்களும், அருஞ்சொற்களின் பொருளும், அழ கிய ஆழ்வதார்களின் ஐதீகப் படங்களுடன் கூடியது; இதன் பின் பகுதியில் ஆண்டாள் வாழித் திருநாமம் என்ற வேதப் பிரான் பட்டர், அப்பிள்ளே ஆகியோர் பாடிய பாடல்களும் உள் ளன. viii. 733/1925/I. O31,1

2218, i, நாலாயிர திவ்விய பிரபந்தம்: முதற் பதிப்பு; ii, பி, கிருஷ்ணமாச்சாரிய சுவாமி அண்டு டி,சி, பார்த்தஸாரதி அய்யங்கார்; கோல்டன் எலக்டிரிக் பிரஸ் சென்னை; iii அக்டோபர், 1925; iv. செ. மூ. ப. 760; v. 22x14 செ. மீ.; vi. 4—8—0 ; vii. வைணவ சமயப் பெரியார்களான பன்னிரு ஆழ்வார்கள் அருளிச் செய்த "நாலாயிர திவ்யப் பிரபந்தம் என்னும் தோத்திரப் பாக்கள்—அரும்பதவுரை யுடன் தொகுக்கப்பட்ட நூல்; வண்ணப்படங்களுடன் கூடியது; viii. 1236/1925 iv. o31,1

2219, i. நாலாயிர திவ்விய பிரபந்த சாரம்: முதற் பதிப்பு; ii சிவசங்கர செட்டி, டென்னை; ரிப்பன் பிரஸ், சென்னை; iii. 1922; iv. செ. மூ. ப. 120; v. 16x13 செ. மீ; vi. 0—6—0; vii. இதில் ஆழ்வார்கள் அருளிச் செய்த தமிழ் வேதமாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் உள்ள செவிக்கினிய செந்தமிழ் பாசுரங்கள் தேர்ந்து தொகுக்கப்பட் டிருக்கின்றன; முதல் ஆயிரம் முதல் நான்காவது ஆயிரம் வரை நான்கு பகுதியாகத்தரப்பட்டிருக்கின்றன. நூலினிறுதி யில் அனுபந்தமாக இனிய பாசுரங்கள் சில தொகுக்கப்பட் டுள்ளன; viii. 586/1923/I 031.1

2220 1 நித்தியாறு ஸந்தநாம்: முதற் பதிப்பு ; ii. சைலநாதர்; ஹாடென் அச்சுக் கூடம், சென்னை; iii. 1922; v. செ. மூ. ப. 160; v. 22x14 செ.மீ. ; vi. 2—0—0;

vii. வைணவ சமயத்துக்குரிய இந்நூலில் திருப்பல்லாண்டு திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, சிறிய திருமடல் முதலியவை அடங்கியுள்ளன. ஆழ்வார்களின் படங்களும், பஞ்சாயுதங்களின் படங்களும் இடையிடையே அமைந்துள்ளன; viii. 1274/1924/I. O31,1

2221. i. நித்யாநு ஸந்தாநம் : முதற்பதிப்பு ; ii. ஆசூரி ஸ்ரீநிவாசாசாரிய ஸ்வாமிகள், பெரும்புத்தூர் ; ஸ்ரீநிகேதந அச்சுக்கூடம், சென்னை அண்டு தனியாம்பாள் அச்சுக்கூடம் ; iii. 1924 ; iv. செ.மூ.ப. 128 ; v. 22×14 செ. மீ. ; vi. .......... ; இந்நூலில் திருப்பல்லாண்டு திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை முதலிய நூற்களடங்கியிருக்கின்றன. ஆழ்வார்களைப் போற்றி இயற்றப் பெற்ற இந்நூல் வைணவ சமயக் கொள்கையினர்க்குச் சிறந்த புத்தகம்; viii. 356/1924/III. O31,1

**மதுரகவியாழ்வார்**

i. கண்ணிநுண் சிறுத்தாம்பு : முதற்பதிப்பு (**தொ.எ. 2209** பார்க்க) ; ii. பி. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகள் ; **கோல்டன்** பிரஸ், சென்னை ; iii. 1925 ; iv. செ.மூ. எ. 8+11 ; v. 16×12 செ. மீ. ; vi. .......... ; vii. குருகூர் நம்பி விஷயம் கலிவிருத்தப்பாவில் அமைந்தது; இராகதாள அமைப்புடன் கூடிய பதினொரு பாடல்கள் கொண்டது. ஆழ்வாரது ஐதீகப் படத்துடன் கூடியது; viii. 733/1925/I.

O31,1

2222. i. **ஐயந்தி மாலை** : முதற்பதிப்பு ; ii. மா.கொ. பட்டாபிராம முதலியார், சென்னை ; இராதாகிருஷ்ண பிரஸ், சென்னை ; iii. 1925 ; iv. செ.மூ.ப. 106 ; v. 14×11 செ. மீ ; vi. 0—5—0 ; vii. நாலாயிர திவ்விய பிரபந்தத்தினின்று தொகுக்கப்பட்ட பாடல்கள் கொண்டது; இது கண்ணபிரானது அவதாரச் சிறப்பையும், பால லீலைகளையும் விளக்கும் 26 பதிகங்கள் கொண்டது; இது அனைவரும் சுலபமாய், பஜனைக் கூடங்களிலும் இல்லங்களிலும், ஸ்ரீ ஜெயந்தி முதலிய சிறப்புத் தினங்களிலும் பாடுவதற்கு ஏற்ற வகையில் எழுதப்பட்டுள்ளது. viii. 873/1925/II.

O31,1

## 894.8111 பிற்காலக் காவியங்கள்

**அதிவீரராம பாண்டியன்**

2223. i. நைடதமூலமும் விருத்தியுரையும் : **ஐந்தாம் பதிப்பு** ; ii. வித்தியாரத்நாகர **அச்சுக்கூடம்**, சென்னை ; iii. 1919 ; iv. செ.மூ. உ. ப. 825 ; v. 21×13 செ. மீ. ; vi. 4—0—0 ; vii. அதிவீரராம பாண்டியனர் இயற்றிய **நைடத மூலமும் ந. கதிரைவேற் பிள்ளை இயற்றிய விருத்தி உரையும் இந்நூலில்**

அமைந்துள்ளன; நூலாசிரியர் வரலாறும் கொடுக்கப்பட்டுள்ளது; இடையே படங்களும், இறுதியில் இந்நூலில் அடங்கிய அலங்கார அகராதியும், பாட்டு முதற் குறிப்பகராதியும் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 1364/1924/II. O31,1

**2224.** i. நைடதச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. என். ரத்னம் அண்டு கம்பெனி, பசுமலை ; மீனலோசனி பிரஸ், மதுரை ; iii. ஜூலை, 1921 ; iv. செ. மூ. உ. எ. 201 ; v. 18×12 செ. மீ. ; vi. 0—8—0 ; vii. அதிவீரராம பாண்டியன் என்னும் பாண்டிய மன்னர் இயற்றிய நள-தமயந்தி வரலாறுள "நைடதம்" என்னும் மூல நூலின் சுருக்கத்தைக் காணலாம்; இன்றியமையாத செய்யுட்கள் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன. ஈற்றில் செய்யுட்குறிப்புகள் தரப்பட்டுள்ளன; viii. 434/1921/III. O31,1

**2225.** i. நைடதச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. என். ரத்தினம் அண்டு கோ, பசுமலை ; எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை ; iii. அக்டோபர், 1922 ; iv. செ.மூ. உ.ப. 80 ; v. 19×13 செ. மீ ; vi. 0—8—0 ; vii. அதிவீரராம பாண்டியன் இயற்றிய "நைடதம்" என்னும் கதையின் செய்யுள் மூலம் தொகுக்கப்பட்டு, அரும்பதவுரை, குறிப்புக்கள், விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. கதைத் தொடர்பு அற்றுப் போகாமல் இருக்கும்படி இடையிடையே உரைநடை வரைந்து இதில் சேர்க்கப்பட்டுள்ளது; viii. 323/1922/IV. O31,1

**2226.** i. நைடதம் : முதற் பதிப்பு ; ii. கே. வெ. துரைசாமி முதலியார், சென்னை ; திருமகள் விலாசம் பிரஸ், சென்னை ; iii. 1923 ; iv. செ.மூ. உ.ப. 662 ; v. 22×14 செ. மீ. ; vi. 4—0—0 ; vii. நளனது வரலாற்றைக் கூறும் பாடல்கள் கொண்டது; பதவுரை, விசேடவுரை, கருத்துரை ஆகியவையும் இதில் அடங்கியுள்ளன. லெத்தகிராப் படங்களுடன் கூடியது. தி. முத்துச்சாமி முதலியார் முன்பு பரிசோதித்து வெளியிட்ட பிரதிக்கு இணங்க இது அச்சிடப்பெற்றது. viii. 1241/1924/IV. O31,1

**அரங்கசாமி நாயுடு, தி., காஞ்சிபுரம்**

**2227.** i. ராமபராக்கிரமம் : மூன்றும் பதிப்பு ; ii. எஸ். துரைசாமி முதலியார், கீழ்க் கட்டளை ; பாரதி அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1921 ; iv. உ.ப. 116 ; v. 18×12 செ.மீ. ; vi. 0—6—0 ; vii. ஸ்ரீராமரின் பராக்கிரமத்தை விளக்கும் கதைகள் கொண்ட நூல்; இராமாயணம், பாகவத புராணம்

ஆகியவற்றிலிருந்து மேற்கோள்களாகப் பாடல்கள் இந்நூலில் எடுத்தாளப்பட்டுள்ளன; viii. 707/1921/IV. O31,1

**ஆசுகவிராஜர்**

2228. i. அரிச்சந்திர புராணம் : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. இரத்தினவேலு முதலியார், ஈக்காடு; கோல்டன் எலெக்ட்ரிக் பிரஸ், சென்னை ; iii. 1925 ; iv. செ.மூ.உ.எ. 1225 ; v. 22×14 செ. மீ. ; vi. 2—8—0 ; vii. ஆசுகவிராஜர், அரிச்சந்திரன் மீது பாடிய பாடல்களின் மூலமும் திரிசிரபுரம் மகாவித்வான் வி. கோவிந்த பிள்ளை அவர்கள் எழுதிய பொழிப்புரையும், லெத்த கிராப் படங்களும் கூடியது. இந்நூல் ஒன்பது காண்டங்களையும் 1225 விருத்தப் பாடல்களையும் உடையது. ஆக்கியோரின் பெயர் முதலியன கூறும் பாயிரப் பாடல்களால் இந்நூல் அரங்கேறிய காலம் தெரிய வருகிறது; திருப்புல்லாணித் திருமால் முன்னிலையில் சகம் 1446-ல் (கி.பி. 1524) இது அரங்கேற்றப் பெற்றதாம். வடமொழிக் கவிஞர் நூல்களும் தமிழில் வெண்பாவினால் அமைந்த ஒரு முன்னூலும் இதற்கு ஆதாரமாக அமைந்தனவாம்; நெல் லூர் வீரன் என்றும் இவ்வாசிரியருக்கு மற்றொரு பெயருண்டு.

viii. 731/1925/I. O31,1

2229. i. அரிச்சந்திர புராண மூலமும் உரையும் ; ii. வித்தியாரத் நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. 1925 ; iv. செ.மூ.உ.எ. 1315 ; v. 21×14 செ. மீ. ; vi. 3—0—0 ; vii. நெல்லூர் வீரன் என்னும் ஆசுகவிராஜர் அவர்கள் இயற்றிய அரிச்சந்திர புராண மூலமும், சுந்தரநாதம் பிள்ளையவர்கள் எழுதிய விருத்தியுரையுமடங்கியது இந்நூல்; உரையாசிரியர் ஒத்த பிறநூல் கருத்து ஒப்புமை காட்டிச் செல்வதோடு, ஆங்காங்கே சொல்லமைதியும் இலக்கண மரபுகளும் எடுத்துக் காட்டியுள் ளமை உரையின் சிறப்பை மிகுவிக்கின்றன; viii. 1054/1925/III. O31,1

2230. i. இராமாயணச் சுருக்கம்—மூலமும் உரையும் : முதற் பதிப்பு ; ii. ந. கபாலமூர்த்திப் பிள்ளை, ரங்கூன் ; நேஷனல் பிரஸ், பெங்களூர் ; iii. 1925 ; iv. செ.மூ.உ.எ. 59 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—12—0 ; vii. நூறு பாட்டுக்களாய ஆகிய இராமாயணச் சுருக்கமும், அதற்கு ஏற்ற உரையும் கொண்டது. இது பல பகுதிகளாக வெளியிடப்பட்டது; அவற்றுள் ஒரு பகுதி இது. இதற்கு உரை எழுதியவர் அப்பங்க மாநகர் ந. கபாலமூர்த்திப் பிள்ளையாவர். உரையாசிரியரைப் பற்றிப் பலர் எழுதிய சிறப்புரைகளுடனும், சாத்துக் கவி யுடனும் கூடியது; viii. 6/1925/II. O31,1

இராஜு முதலியார், வி., குயப்பேட்டை

31. வாலி மோட்சம்— மூலமும் உரையும் : மறு பதிப்பு ; ii. பி. நா. சிதம்பர முதலியார் அண்டு பிரதர்ஸ், சென்னை ; வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. 1924 iv. உ. ப. 63 ; v. 22×14 செ. மீ. ; vi. 0—4—0 ; vii. கம்ப இராமாயணத்தின் ஒரு பகுதியான வாலி மோட்சம் மூலமும் விரிவான உரையும் கொண்டது இந்நூல்; viii. 309/1924/IV. O31,1

யனா

1232. i. இராமாயணம்-பாலகாண்டம் : முதற் பதிப்பு ; ii. தி. த. கனக சுந்தரம் பிள்ளை, திருக்கோணமலை ; வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை ; iii. 1923 ; iv. செ.மூ.எ. 1395 ; v. 22×14 செ.மீ.; vi. 2—0—0 ; vii. கம்ப ராமாயணப் பாலகாண்டச் செய்யுட்கள் அடங்கிய நூல் இது; அரும்பத வுரையும் இறுதியில் கொடுககப்பட்டுள்ளது; சுன்னாகம் அ. குமார சாமிப் பிள்ளையும், திருக்கோணமலை த. கனக சுந்தரம் பிள்ளையும் உரையியற்றியுள்ளனர்; பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து வெளியிடப்பட்ட பதிப்பு; viii. 323/1923/IV. O31,1

233. கம்பராமாயணச் சுருக்கம்—அயோத்யா காண்டம் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1921 ; iv. செ.மூ. உ.எ. 220 ; v. 18×13 செ. மீ. ; vi. 0—14—0 ; vii. கம்ப ராமாயண அயோத்தியா காண்டத்தின் சுருக்கம், பொழிப் புரையாக, நயஞ்சுட்டி விளக்கப்பட்டுள்ளது. சிற்சில இடங்களில் மூலமும் மூலநூலின் சில அரும்பதங்களுக்குப் பொருளும் தரப்பட்டுள்ளன. மாணவர் பதிப்பாக வெளியிடப்பட்டது. viii. 90/1921/III. O31,1

234. i. கம்ப ராமாயண சுருக்கம் – ஆரண்ய காண்டம் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1924 ; iv. உ.ப. 196 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—12—0 ; vii. பள்ளிச் சிறுவர் களும் கம்பருடைய கவிநயங்களை ஒருவாறு உணர்ந்து கொள்ளும் வண்ணம் ஆரண்ய காண்டத்தைச் சுருக்கமாகத் தொகுத்து, கதைப் போக்கு விளங்குமாறு உரையிடையிட்டு வெளியிடப்பட்ட நூல் இது; குறிப்புரையுடன் கூடியது. viii. 1103/1924/IV. O31,1

**இருஷ்ணமாச்சாரியர், கடாம்பி, புதுப்பட்டு**

**2235.** i. சூளாமணி : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1924 ; iv. உ.ப. 56 ; v. 19×13 செ. மீ. ; vi. 0—2—6 ; vii. தோலாமொழித் தேவர் இயற்றிய "சூளாமணி" என்னும் செய்யுள் நூலையும் , சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் இயற்றிய "வசன சூளாமணி"யையும் தழுவி இக்காலக் கல்விச் சாலையின் நோக்கத்தினை ஒட்டி எழுதப் பட்டது; கடினமான பதங்களுக்கும் செய்யுள்களுக்கும் பொருள் இனிது விளங்க அரும்பதவுரையும் கடைசியில் சேர்க்கப் பட்டுள்ளது; இடையிடையே செய்யுள் மேற்கோளினையுடையது. viii. 1582/1924/IV. O31,1

**குப்புசாமி முதலியார், மா. வ. நல்., தொண்ணூடு**

**2236.** i. அநுசூயை வெண்பா : முதற் பதிப்பு ; ii. மா. வ. நல். குப்புசாமி முதலியார், தொண்ணூடு ; சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. 1922 ; iv. செ.மு. உ.ப. 26 ; v. 18×13 செ. மீ. ; vi. .......... ; vii. வெண்பாக்களினாலாகிய அநுசூயாவின் புராணக் கதை. அரும்பதவுரை கொண்டது; சென்னை நவசக்தி ஆசிரியர் திரு. வி. க. அவர்கள் தந்த சாற்றுக் கவியுடன் கூடியது; viii. 1140/1922/III. O31,1

**குமரகுருதாச சுவாமிகள், இராமேச்சுரம்**

**2237.** i. குமாரசுவாமியம் : முதற்பதிப்பு ; ii. குமரகுருதாச சுவாமி, சென்னை ; சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச்சு, 1925 ; iv. செ.மு.எ. 1192 ; v. 25×17 செ. மீ. ; vi. 5—0—0 ; vii. ஸ்ரீகுமாரப் பிரானுடைய அரும்பெரும் திருவிளையாடல்களையும் அடியார் அவன்பால் செலுத்தும் அன்பின் திறத்தையும் அவர்கள் அடையும் பேறுகளையும் விளக்கும் நூல் இது. "ஸ்ரீமத் குமாரசுவாமியம்" என்று இது குறிப்பிடப் பெறும். "குமாரசுவாமியம்" என்னும் சோதிட நூல் ஒன்றும் உள்ளதால் அதனோடு மயங்காமைப் பொருட்டு, "ஸ்ரீமத்" என்னும் சிறப்புச் சொல்லும் இந்நூற் பெயரோடு சேர்க்கப்பட்டுள்ளது. இது திருவிளையாடல், கேத்திரம், கடாவிடை, வேட்கை, பலதிறப் பொருள் என ஐந்து காண்டங் கள் கொண்டது; சுவாமிகள் எழுதிய எழுவாயுரை என்னும் முகவுரை நூல் முதலில் உள்ளது; இது ச. சச்சிதாநந்தம் பிள்ளை அவர்கள் எழுதிய முதற் காண்டத்துரையோடும் நூலாசிரியரது திருமாலை மாற்றுரையோடும் கூடியது; viii. 756/1925/II. O 31,1

**2238.** i. குமார உற்பவம் அல்லது ஸ்கந்த விஜயம் : முதற் பதிப்பு ; ii. சி. எஸ். இராதாக் கிருஷ்ணய்யர், கும்பகோணம் ; ஸ்டார் அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. 1921 ; iv. உ.ப. 72 ; v. 11×9 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. கந்தபுராணத்தை உரைநடையில் சுருக்கித் தருவது; விரிந்து கிடக்கின்ற இப் புராணத்தை ஒருமணி நேர அளவில் பாராயணம் செய்யக்கூடிய முறையில் சுருக்கியுள்ளார் இதன் ஆசிரியர். கும்பகோணம் தண்டமிழ்த் தொண்டன் வேங்கடராமன் இதற்கு அணிந்துரை தந்துள்ளார் ; viii. 920/1921/I. O31,1

**குமாரசுவாமிப் பிள்ளை அ. (மொ. து.)**

**2239.** i. இராமோதந்தம் : முதற் பதிப்பு ; ii. திருநாராயண அய்யங்கார், மதுரை ; மதுரைத் தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை ; iii. 1922 ; iv. செ.மூ.எ. 1+118 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. இராமோதந்தம் என்னும் இந்நூல் இலகுவுஞ் சுருக்கமும் இயைந்து வடமொழி பயிலும் மாணவர் களால் பெரும்பாலும் முதற்பாடமாகக் கொண்டு படிக்கப்பட்டு வருகின்றது; இராமோதந்தம் என்பது இராமனுடைய சரித்திரம் எனப் பொருள்படும். இராம+உதந்தம் இராமோதந்தம்; இராமனுவான் புருட லக்கணமெல்லாம் பூரணமாய் நிறைந்து சகல சற்குணமும் வாய்ந்து அவதரித்த ஓரவதார புருடன்; உதந்தம் சரித்திரம். செந்தமிழ் பயிலும் சிறுவர்களுக்கும் பயன்படும் வகையில் மொழி பெயர்த்து விருத்தப்பாவினால் ஆக்கப்பட்டது ; viii. 1391/1922/I. O31,1

**கொங்குவேளிர்**

**2240.** i. பெருங்கதை : முதற் பதிப்பு ; ii. வே. சாமிநாதயையர், உத்தமதானபுரம் ; கமர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1924 ; iv. செ.மூ.உ.ப. 928 ; v. 21×14 செ.மீ. ; vi. 7–8–0 ; vii. வே. சாமிநாதையரால் பரிசோதித்து நூதனமாக எழுதிய குறிப்புரை முதலியவற்றோடும் கதைச் சுருக்கத்தோடும் பதிப்பிக்கப்பட்டுள்ளது; இதில் உதயணன் சரித்திரம், பெருங்கதை மூலம், நூலாசிரியர் வரலாறு முதலியவற்றுடன் சிறந்த அரும்பத வுரையும் காணப்படுகிறது; அரும்பதம் முதலியவற்றின் அகராதி நூலின் இறுதியில் அமைந்திருக்கிறது ; viii. 1739/1924/I.

O31,1

**கோவிந்தராஜ முதலியார், கா. ர, சென்னை**

**2241.** i. நளன் சரிதை : முதற் பதிப்பு ; ii. இந்தியன் பப்ளிஷிங் ஹவுஸ் லிமிடெட், சென்னை : பி. ஆர். ராம ஐயர் அண்டு கோ, சென்னை ; iii. 1923 ; iv. உ. ப. 128 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இந்நூல் புராணத்தில் வரும் நளன்–

தமயந்தி ஆகியோர் கதையைத் தழுவி உரைநடையில் எழுதப் பட்டது. நிகழ்ச்சிகளில் சிலவற்றை விளக்கும் படங்களுமுண்டு. இச்சரிதை பெரும்பாலும் நளவெண்பாவையும் சிறுபான்மை நைடதத்தையும் தழுவி எழுதப்பட்டது ; viii. 43/1923/III. O31,1

**சம்பந்த சரணாலய சுவாமிகள்**

**2242**. i. *கந்த புராணச் சுருக்கம்—மூலமும் உரையும் : இரண்டாம் பதிப்பு* ; ii. வி. உலகநாத முதலியார், சென்னை ; சாது அச்சுக் கூடம், சென்னை ; iii. 1925 ; iv. செ.மூ:உ.எ. 1048 ; v. 22×14 செ.மீ. ; vi. 3–0–0 ; vii. சம்பந்த சரணாலய சுவாமிகள் அருளிச் செய்த கந்த புராண மூலச் செய்யுளின் சுருக்கம் கொண்டது. இது காஞ்சிபுரம் சபாபதி முதலியார் அவர்கள் இயற்றிய பொழிப்புரையும், சென்னை வி. உலகநாத முதலியார் அவர்கள் செய்த விருத்தியுரையுடனும் கூடியது. இதில் ஆசிரியர் சம்பந்த சரணாலயரின் சரித்திர சுருக்கம் கொடுக்கப் பட்டுள்ளது ; viii. 757/1925/II. O31,1

**சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்**

**2243**. i. *பிரபுலிங்க லீலை : முதற் பதிப்பு* ; ii. பி. என். சிதம்பர முதலி பிரதர்ஸ், சென்னை ; வித்தியாரத்நாகர அச்சுக்கூடம் ; iii. 1924 ; iv. செ.மூ.எ. 1159 ; v. 21×13 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. அல்லம தேவன் வரலாறு உயர்ந்த காவிய நடையில் அமைந்துள்ளது. கற்பனை வளஞ்சிறந்து கற்போர்க்குக் கழி பேருவகையைத் தரும்தகையது. துதிகதி முதல் மான்யகதி ஈறுக இருபத்தைந்து கதிகளைக் கொண்டது. மான்மியகதி 23-ஆம் பாடலில் ஆசிரியர் நூல் செய்த காலம் சகாப்தம் 1574 (கி.பி.1652) என்று குறிக்கப்பட்டிருக்கிறது. நூல் முழுமைக்கும் யாழ்ப்பாணம் நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள் எழுதிய குறிப் புரை உளது ; viii. 299/1924/IV. O31,1

**சுப்பிரமணியபாரதி, அ., வரகவி, சென்னை**

**2244**. i. *இராமாயண இரகஸ்யம் : திருத்திய பெரிதாக்கப்பட்ட மூன்றும் பதிப்பு* ; ii. பாலவிநோதினி ஆபீஸ், சென்னை ; நோபிள் பிரஸ், சென்னை ; iii. 1922 ; iv. உ.ப. 125 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. இதில் இராமா யணத்தின் நாயக நாயகிகளின் குணங்களும் மற்றும் பரதன், குகன், மாருதி, வீடணன் ஆகிய இவர்களின் குணங்களும் விளங்க அவரவர் சரித்திரம் தனித் தனியே, சிறுவர்க்கு ஏற்ற நடையில் எழுதப்பட்டுள்ளது. இராமாயண இரகசியம் என்கின்ற பெயரில் இரகசியம் என்பது கருத்து என்ற பொருளில் நிற்பதல் லாமல் வேறு பெரிய இரகசியத்தைக் குறித்ததன்று ; viii. 798/1922/II. O31,1

**சுப்பிரமணிய பாரதி, சி.**

2245. பாஞ்சாலி சபதம் : முதற் பதிப்பு ; ii. ஹிந்து பிரசார அச்சுக்கூடம், சென்னை ; iii. 1923 ; iv. செ.மூ.ப. 112 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. பாரதியாரின் எளிய நடைடையும் எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தமும் எக்காலத்திற்கும் ஏற்ப அமைந்திருத்தலை இந்நூலில் காணலாம். இந்நூலிடையே திருதராட்டிரனை உயர்ந்த குணங்களையுடையவனாய்ச் சித்திரித்திருப்பது சிறப்புடையது. பொருள் விளக்கமும், குறிப்புகளும் நூலிறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது; viii. 910/1924/I. O31,1

**சேஷகிரி அய்யர், கா. சு.**

2246. i. ஈச்வரலீலை அல்லது மதுரையில் நடந்த 64 திருவிளையாடற் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. கா. சு. சேஷகிரி அய்யர், சென்னை ; லாஜர்னல் பிரஸ், மதராஸ் ; iii. 1924 ; iv. உ.ப. 88 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. எளிய தமிழ் நடையில் சிவபெருமானுடைய 64 திருவிளையாடல்களையும் கூறும் இந்நூலை ஆசிரியர் பாடப் புத்தகமாகவும் வைத்துக் கொள்ளக் கோருகின்றார். இவர் "மஹாபாரத வசனம்", "இங்கிலீஷில் பாரதம்" முதலான புத்தகங்களையும் இயற்றியவர் viii. 62/1924/III. O31,1

**தருமலிங்க முதலியார், ஆ., சென்னை**

2247. i. அமிர்த ராமாயணச் சுருக்கம் : முதற் பதிப்பு ; .ii ஆ. தருமலிங்க முதலியார், சென்னை ; நோபில் பிரஸ், சென்னை ; iii. 1922 ; iv. செ.மூ.ப. 68 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இராமாயணத்தின் முதல் ஆறு காண்டங்களின் சுருக்கம் செய்யுள் வடிவில் இதன்கண் தரப்பட்டுள்ளது. இந்நூலாசிரியரின் அன்பர் வரகவி சுப்பிரமணிய பாரதி, சென்னை கோமளேசுவரன்பேட்டை வித்வான் திரு. ம. இராசகோபால பிள்ளை ஆகியோர் தந்த சிறப்புப் பாயிரச் செய்யுட்களுடன் கூடியது. ஸ்ரீராமன் பட்டாபிடேகப் படமும் இதன்கண் உண்டு. viii. 797/1922/II. O31,1

2248. i. திருவிளையாடற் புராணம் : ii. ஜனானுகூல பிரஸ், திருச்சி ; iii. 1925 ; iv. செ.மூ.ப. 16 ; v. 21×14 செ.மீ. ; vi.............. ; vii. திருவிளையாடற் புராணம், தருமிக்குப் பொற்கிழியளித்த படலம் இந்நூலில் அடங்கியுள்ளது ; viii. 1176/1925/III. O31,1

2249. i. திருவிளையாடற் புராண வசன சங்கிரகம் : முதற் பதிப்பு. ii. முத்தையபிள்ளை, எஸ். மதுரை ; மனோன்மணி விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1923 ; iv. உ.ப. 56 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. சோமசுந்தரக் கடவுளின் அறுபத்து நான்கு விளையாடல்களையும் கூறுகின்ற ஒரு சிறந்த உரைநடை நூல் இது ; viii. 696/1923/IV.

O31,1

**பக்கீறுமதாறுப் புலவர், பி, இளையான்குடி**

2250. i. இராஜமணிமாலை : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. இட்டா—சக்கரபாணிநாயுடு, சென்னை ; பிரிட்டிஷ் பிரஸ் சென்னை ; iii 1922 ; iv. உ.ப. 1412 ; v. 24×16 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. முகம்மதும் யார்களும் பேரர்களும் உலகில் அரசு செலுத்தியது குறித்துப் பாடப்பெற்ற சிறு காவியம். பதம், தொங்கல் என்ற இரண்டு விதமான பாடல்களைக் கொண்டது. இவை பெரும்பாலும் விருத்தப்பாக்களாகவே உள்ளன. ஹபீபு முகமதுப் புலவரவர்கள், மீருன்களிப் புலவர் ஆகியோர் தந்த சாத்துக் கவிகளுடன் கூடியது. முதற் பதிப்பில் ஏற்பட்டிருந்த பிழைகளைக் களைந்து உதவியவர் காளைஹசன் அலிப் புலவராவர் ; viii. 620/1922/I. O31,1

2251. i. பால இராமாயணம் : முதற் பதிப்பு ; ii. ஜயம் அண்டு கம்பெனி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii; 1923 ; iv. உ.ப. 62 ; v. 18×14 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. இராமாயணக் கதையைச் சிறுவர் சிறுமியர்களுக்கான எளிய நடையில் விளக்குகின்றது. படத்துடன் கூடிய புத்தகம் இது ; viii. 531/1924/I. O31,1

**புகழேந்திப் புலவர்**

2252. i. நளவெண்பா மூலமும் விருத்தியுரையும் : முதற் பதிப்பு; ii. இ.மா. கோபாலகிருஷ்ணக்கோன், மதுரை, எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை : iii. 1922 ; iv. செ.மு. உ.எ. 440 ; v. 20×14 செ.மீ. ; vi. 2–8–0 ; vii. நளவெண்பா மூலமும் உரையும் அடங்கிய நூல் இது. ஆ. கார்மேகக் கோனார், பு. சிதம்பரம் புன்னைவனநாத முதலியார், வீ. ஆறுமுகஞ் சேர்வை ஆகியவர்கள் புதுப்பித்தும், திருத்தியும், விளக்கியும் இயற்றிய விருத்தியுரையுடன் கூடியது இந்நூல் ; viii. 830/1923/I. O31,1

2253. i. நளவெண்பா : முதற் பதிப்பு : ii. தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி ; பி. ஆர். ராம ஐயர் அண்டு கோ, சென்னை ; iii. பிப்ரவரி, 1923 ;

iv. செ.மூ.உ.எ. 424 ; v. 18×13 செ.மீ. vi. 1-0-0 ; vii. நளவெண்பா மூலமும் உரையுங் கொண்டது இந்நூல். வா. மகாதேவ முதலியார் அவர்கள் எழுதிய அரும்பொருள் விளக்கமும் இதில் அடங்கியுள்ளது ; viii. 1006/1923/I. O31,1

2254. i. நளவெண்பா : மாணவர் பதிப்பு ; ii. தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி; பி. ஆர். ராம ஐயர் அண்டு கோ., சென்னை ; iii. பிப்ரவரி, 1923 ; iv. செ.மூ.உ.எ. 424 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. இது புகழேந்திப் புலவர் இயற்றிய நள வெண்பா என்னும் நூல், மாணவர்களுக்கு உதவும் பொருட்டு அமைந்தது. வா. மகாதேவ முதலியாரது அரும்பொருள் விளக்கத்துடன் கூடியது ; viii. 1007/1923/I. O31,1

பெருந்தேவனார்

2255. i. பெருந்தேவனார் பாரதம் என்னும் பாரத வெண்பா— உத்தியோக பருவம் ; முதற் படிப்பு ; ii. அ. கோபாலையன், சென்னை ; ஆதர்ஸ் பிரஸ் அண்டு பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை ; iii. 1924 ; iv. செ.மூ.உ.எ. 483 ; v. 23×15 செ.மீ. ; vi. 1-6-0 ; vii. "பெருந்தேவனார் இயற்றிய இப்பாரதம் பன்னீராயிரம் இனிய பாட்டும் வசனமும், கலந்ததோரழகிய நடையாலானது. அவற்றுள் இப்பொழுது கிடைத்திருப்பவை 820 பாடல்களே. இவற்றுள் உத்தியோக பருவம், வீடும பருவம், துரோண பருவத்தின் முற்பாதி என்பவை அடங்கியுள்ளன. இவைகளின் வசனத்தை நீக்கிப் பாட்டுக்களை மட்டும் சென்னை சர்வகலாசாலையார் மெட்ரிகுலெஷன் பரீட்சைக்குப் பாடமாக்கி வந்திருக்கின்றனர். பலரின் தூண்டுதலினால் அ. கோபாலையன் அவர்கள் சென்னை அரசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைப் பிரதியின் உதவியுடன் பாட்டும் வசனமும் சேர்த்து இரண்டு பகுதியாக வெளியிட்டவற்றுள் இது முதல் பாகம். இதில் "உத்தியோக" பருவம் மட்டும் உள்ளது ; viii. 1777/1924/IV. O31,1

2256. i. பெருந்தேவனார் பாரதம் என்னும் பாரதவெண்பா : வீஷ்ம, துரோண பருவங்கள் ; ii. அ. கோபாலையன் ; கலாரத்நாகரம் பிரஸ், சென்னை ; iii. 1925 ; iv. செ.மூ. உ.எ. 830 ; v. 22×14 செ.மீ. ; vi. 1-6-0 ; vii. வட மொழியில் வியாச முனிவராலியற்றப்பட்ட பாரதத்தைச் சங்கப் புலவராகிய பெருந்தேவனார் தமிழில் இயற்றினார். அந்நூலி லுள்ள சில செய்யுட்களே இப்போது கிடைத்துள்ளன. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த பெருந்தேவனார் எனப் பெயரிய ஓர் புலவர் இப்பாரத வெண்பாநூலை இயற்றியருளினர். எனினும் இடையிடையே அகவற்பாக்களும், மணிப் பிரவாள

நடையில் உரைநடைப் பகுதியும் விரவி வருகின்றது. உரைநடை விரவி வருகின்ற காரணத்தால் இந்நூலும் "உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்" எனப் படுகின்றது ; viii. 155/1925/III O31,1

2257. i. **மஹாஸ்கந்த புராண வசனம்**—சம்பவ காண்டம் : முதற் பதிப்பு ; ii. ஆர். வெங்கடாசலம் கம்பெனி, சென்னை ; ராதாகிருஷ்ண பிரஸ், சென்னை ; iii. 1923 ; iv. உ.ப. 160 ; v. 25×16 செ.மீ. ; vi. 1–8–0 ; vii. இது உரைநடையில் எழுதப்பட்ட கந்தபுராணத்தின் சம்பவ காண்டம் ஆகும் ; viii. 1151/1923/II. O31,1

**ராகவாச்சாரியார், திருவல்லிக்கேணி**

2258. i. துருவவெண்பா : முதற் பதிப்பு ; ii. பி. ஆர். ராமய்யர் அண்டு கோ பிரிண்டர்ஸ், சென்னை ; iii. நவம்பர் 1925 ; iv. செ.மூ.உ.எ. 286 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. துருவ நட்சத்திரமாக விளங்கும் ஸ்ரீதுருவனின் புராண வரலாறு. வெண்பாக்களாக இயற்றப்பட்ட நூல் இது. குறிப்புரையுடன் கூடியது. மாணவர் பதிப்பு மு. இராமைய முதலியார் பாடிய சிறப்புபாயிரம் நூன்முகத்திலமைந்திருக்கின்றது ; viii. 1054/1925/IV. O31,1

**வாமன முனிவர்**

2259. i. மேருமந்தர புராணம் : முதற் பதிப்பு ; ii. அ. சக்கரவர்த்தி, சென்னை ; சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. 1923 ; iv. செ.மூ.உ.ப. 1405 ; v. 22×15 செ.மீ. ; vi. 6–0–0 ; vii. ஜெயின் மதம் பற்றியும், அம்மதத்தின் தத்துவம் பற்றியும் விளக்கும் பாடல்களாலாகிய நூல் இது. வீடூர், கு. அப்பாசாமி சாஸ்திரியாரின் உரையும் நூலாசிரியர் உரையும் அடங்கியுள்ளன. செய்யுள் முதற் குறிப்பகராதி நூலின் பிற்பகுதியிலும் முன்னுரை சுருக்கங்களுக்குரிய கதைப்பகுதி முதலியன நூலின் முற்பகுதியிலும் அடங்கியுள்ளன. நூல் முதலில் உரைநடையிலும் சுருக்க வரலாறு விரிவாகத் தரப்பட்டிருக்கிறது; viii. 1080/1923/II. O31,1

**வீரமாமுனிவர்**

2260. i. தேம்பாவணி தோன்றல் காண்டம் : முதற் பதிப்பு; ii. ஜே. எம். ஞானதிக்கம் ஐயர், திருச்சிராப்பள்ளி ; ஜோசப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1923 ; iv. செ. மூ. எ. 180 ; v. 22+14 செ.மீ ; vi. தனி விற்பனைக்கு; vii. இது, வீரமாமுனிவர் அருளிச் செய்த தேம்பாவணியில் மகவருள் படலத்திலிருந்து 140 பாடலும், காட்சிப் படலத்திலிருந்து 40 பாடலும் தொகுத்துத் "தோன்றல் காண்டம்" என்னும் பெயரில் குறிப்புரையுடன் வெளியிடப் பெற்ற நூல் ; viii. 902/1923/III. O31,1

வேங்கட சுப்பசன்மா, வெ., திருப்பூர்

**2261.** i. தடாதகை பிராட்டியார் திருமண வெண்பாமாலை ; முதற் பதிப்பு ; ii. எஸ். வி. நஞ்சுண்ட ஐயர், திருப்பூர் ; சாது அச்சுக்கூடம், சென்னை ; iii. 1922 ; iv. செ.மூ.எ. 451 ; v. 21×14 செ.மீ ; vi. 0-12-0 ; vii. தடாதகைப் பிராட்டிக்கும் சிவபெருமானுக்கும் நடந்த திருமணத்தை விவரிக்கும் வெண்பாப் பாடல்கள் அடங்கியது இந்நூல். காவியத்திற்கு அணிகலமாகிய நாடு, நகரம், நகரணிப் படலங்களுடன் கூடியது. இவர் பாடிய மற்றொரு நூல் "மீனாட்சி நீதி வெண்பா" என்பதாகும். கோயமுத்தூர் பண்டித கந்தசாமிப்பிள்ளை, சி.கே. சுப்பிரமணிய முதலியார், வித்துவான் சந்திரசேகர முதலியார், திரு. வி. கலியாண சுந்தர முதலியார் ஆகியோர் இதற்குச்சாற்றுக்கவி பாடியுள்ளனர் ; viii. 229/1923/I.

O31,1

## 894·8111 சிற்றிலக்கியங்கள்

### 894.111 அகவல்

இராமசாமி நாயுடு, தி. அ.

**2262.** i. அநுஸந்தான இராமாயண அகவல்; முதற்பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; அரோரா பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1925 ; iv. உ. ப. 1005; v. 19×13 செ.மீ. ; vi. 0—4—0; vii. இராமாயண காவியம் அகவற்பாக்களால் இயன்றது இந்நூல். சிறப்புப்பாயிரங்கள் நூலின் முற்பகுதியில் அமைந்துள்ளன. viii. 1394/1925I/V.

O31,1

ஔவையார்

**2263.** i. விநாயகரகவல்: முதல் பதிப்பு ; ii. பி. ஆதிமூல முதலி, சென்னை ; ii. ஆதிமூலம் பிரஸ், சென்னை; iii. 1921 ; iv. செ.மூ.ப. 16 ; v. 14×11 செ மீ. vi. 0—0—6 ; vii. ஔவையார் பாடிய விநாயகர் அகவலும், அதன் வரலாறும் "வேழமுகம் வெண்பா, பிள்ளையார் சிந்தனை அகவல், சரஸ்வதி சிந்தனை, பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை, உலகநீதி முதலியனவும் இதன்கண் அடங்கியுள்ளன. viii. 909/1922/I.

O31,1

**2264.** i. விநாயகர் அகவல் [கந்தர் கலிவெண்பா, திருச்செந்தூர் அகவல்] : முதற்பதிப்பு ; ii. தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1921; iv. செ. மூ. ப. 3 ; v. 19×13 செ.மீ.; vi. 0-3-0 vii. விநாயகர்மீது பாடிய பக்திப் (அகவல்) பாடல்கள். இதனோடு குமரகுருபர சுவாமிகள் அருளிய திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பாவும், சிற்றம்பல நாடிகள் அருளிய திருச் செந்தூர் சுப்பிரமணியரகவலும் தரப்பட்டுள்ளன. இம்மூன்று நூல்களும் பிறந்த வரலாறு நூலிறுதியில் தரப்பட்டிருக் கிறது. viii. 748/1921/II.

O31,1

2265. i. விநாயகபகவல்: முதற்பதிப்பு: சி. எ. கிரு. பூஷண முதலியார், திருவள்ளூர்; ஆனந்தாபிரிண்டிங் ஒர்க்ஸ், திரு; வள்ளூர்; iii. அக்டோபர், 1922; iv செ.மூ.ப. 16; v. 14×11 செ.மீ. vi. 0—1—0; vii. இதில் விநாயகர் அகவலின் வரலாறு, ஒளவையார் பாடிய விநாயகர் அகவல், வேழமுகம், பிள்ளையார் சிந்தனை, சரஸ்வதி சிந்தனை, பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை, உலகநீதி ஆகிய நூல்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் பிள்ளையார் சிந்தனை, உயிரும் உடம்புமாம் முப்பது எழுத்து வரிசையில் பாடப் பெற்றிருப்பது கவனிக்கத்தகும். viii. 370/1922/IV.

O31,1

2266. i. விநாயகரவல் (உலகநீதி): முதற்பதிப்பு; ii. பி. இரத்தின நாயகர் அண்டு சன்ஸ், சென்னை; திருமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. 1923; iv. செ. மூ. ப. 12; v. 14×11 செ. மீ..; vi. 0—0—6; vii. இது, விநாயகர், சரஸ்வதி இருவர்மீதும் பாடப்பட்ட செய்யுட்களடங்கிய நூல். viii. 1093/1923/III.

O31,1

2267. i. விநாயகர் அகவல் (வேழமுகம்): முதற்பதிப்பு; ii. டி. என். சுப்பய்யா அண்டு ஸன்ஸ், தஞ்சாவூர்; பூர்ணனந்தா அச்சுக்கூடம், தஞ்சை; iii. 1924; iv. செ. மூ. ப. 8; v. 13×11 செ.மீ.; vi. 0—0—6 ; vii. தன்பூஜையை நிதானத்துடன் சிறப்பாக ஒளவையாரைச் செய்யப்பண்ணி, அவரைவிட்டுவிட்டுச் சென்ற சேரமான் பெருமாணயனருக்கும் முன்னமே கைலாயத்திற்கு கொண்டு சேர்த்த விநாயகரைப் வழிபடுகையில் போற்றியதாக அமைந்த அகவலாகும், சேரமான் பெருமாணயனரைப் பார்த்து அவருக்கும் முன் கைலாயத் தையடைந்த ஒளவையார் கூறிய பாடலும் இதில் உள்ளது. இதனுடன் 'வேழமுகம்' என்னும் பகுதியும் சரஸ்வதி சிந்தனை யும் உள்ளன. viii. 773/1924/II.

O31,1

2268. i. விநாயகரகவல்: முதற்பதிப்பு; ii. பி. எஸ். துரைசாமி முதலி, சென்னை; புவனேஸ்வரி அச்சுக்கூடம், சென்னை; iii. 1924; iv. செ. மூ.ப. 12; v. 18×11 செ. மீ.; vi. 0—1—0 vii...... viii 381/1924/ II.

O31,1

**2269.** i. விநாயகரகவல்: மறுபதிப்பு; ii. இ. ராமசாமிக்கோனார் மதுரை; எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை; iii. 1924; செ. iv. செ. மூ. ப. 12; v. 18×11 செ. மீ.; vi. 0—1—0; vii; viii. 774/1924/IV.

O31,1

i. விநாயகரகவல்: முதற்பதிப்பு; (தொ.எ. 3005 பார்க்க); ii. டி. எஸ். இராமாநுஜ ஐயங்கார், சென்னை; ஸ்ரீராமாநுஜம் அச்சுக்கூடம், திருவொற்றியூர், சென்னை; iii. 1924; iv. செ. மூ. ப. 4; vii. கணபதியின் இயல்பை வருணித்து, ஔவை யாரை ஆட்கொண்டவற்றை விளக்கி, யோகநிலை அருளிய திறத்தினைப் போற்றுவது இந்நூல்; viii. 433/1925/II.

O31, 1

i. விநாயகர் அகவல் (தொ. எ. 2991 பார்க்க); ii. வி உலகநாதம் பிள்ளை; சாது அச்சுக்கூடம், சென்னை; iii. 1925. iv. செ. மூ. எ. 9; v.....vi....vii....viii. 1299/1925/III.

O31,1

**2270.** i. விநாயகர் அகவல், வேழமுகம் உலக நீதி: முதற் பதிப்பு; ii. இ. எம். கோபால கிருஷ்ணக்கோன், மதுரை; எக்ஸ் ஸெல்ஸியர் பிரஸ், மதுரை; iii. 1921; iv. செ. மூ. ப. 16; v. 14×11 செ. மீ.; vi 0—0—6; vii. விநாயகர் அகவலும் உலக நீதியும் சேர்ந்தது. விநாயகர் சதுர்த்தி வரலாறு, விநாயகர் அகவல் வரலாறு, பூஜாவிதி, வேழமுகம் ஆகியனவும் இதன்கண் உள்ளன viii. 1015/1922/I.

O31,1

**2271.** i. விநாயகர் அகவல் வேழமுகம்: முதற் பதிப்பு; ii. நெ. மு. ஷ. ஷண்முக சுந்தரநாயனர்; நாயனர் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1922; iv. செ. மூ. ப.; 16 v. 12×10 செ. மீ.; vi. இலவசம்; vii. விநாயகர் அகவல், வேழமுகம் என்று தொடங்கும் பாடல், பிள்ளையார் சிந்தனை அகவல்; பள்ளிமிற் பிள்ளையார் சிந்தனை, சரஸ்வதி சிந்தனை முதலியன இதில் அடங்கியுள்ளன; viii. 935/1922/III.

O31,1

**2272.** i. விநாயகர் அகவல வேழமுகம், உலகநீதி: முதற் பதிப்பு; ii. பு. அ. இலட்சுமணசாமி முதலியார், சென்னை ஸ்ரீமனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர் 1922 iv. செ. மூ. ப. 16; v. 13X11 செ. மீ.; vi. 0—0—6; vii....;viii....696/1922/II.

O31,1

2273. i. விநாயகர் அகவல், வேழமுகம்; ii. நாயகர் பிரஸ், சென்னை; iii. 1925; iv. செ. மூ. ப. 16; v. 18×10 செ. மீ.; vi..........; vii......; viii. 1400/1925/III.

O31,1

ஔவையார் & குமரகுருபரர்

2274. i. விநாயகர் அகவல், கந்தர் கலிவெண்பா: முதற்பதிப்பு; ii. சேந்தன்தியான சபை, தூத்துக்குடி; அருணோதயம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி; iii. 1924; iv. செ. மூ. ப. 16; v. 19×13 செ. மீ.; vi. 0—1—0 vii. விநாயகர், சுப்பிரமணியசுவாமி ஆகியோர் மீது இயற்றப்பட்ட பக்திப் பாடல்களைக்கொண்டது இந்நூல். ஔவையாருக்கு விநாயகர் அருள் செய்ததனைக் கூறும் பகுதியும் அமைந்துள்ளது. viii. 819/1924/II.

O31,1

கபிலர்

i. கபிலரகவல் (தொ. எ. 3005 பார்க்க); ii. டி. எஸ். இராமாநுஜம் ஐயங்கார், சென்னை; ஸ்ரீராமாநுஜம் அச்சுக்கூடம், திருவொற்றியூர்; சென்னை; iii. 1924; iv. செ. மூ. ப. 7; vii. இதில் கபிலர் வரலாற்றுச் சுருக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது. திருவாரூரில் கபிலரைக் கண்டெடுத்த வேதியர் கபிலர் உபநயனத்துக்குத்தக்க பருவம் அடைந்தபோது அச்சடங்கு செய்ய அவ்வூர் அந்தணரை அழைத்தார். அவர்கள் அப்பிள்ளை நம்மரபிலே பிறந்ததன்று எனக்கூறி அதற்கு இசைய மறுத்தனர். பின் கபிலர் கடவுளது திருவருள் பெற்று அம்மறையவர் கூட்டத்துட் சென்று பாடியது இவ்வகவல். இதில் அவர் மனத்தாலன்றிச் சன்மத்தாலே சாதியென்பது ஒன்றில்லை என்பதை வலியுறுத்துகிறார். ஆதி என்பவள் தன் கணவனுக்குச் செய்த பிரதிக்ஞைப்படி பிறந்த பிள்ளைகளை விட்டு நீக்க மனமெழாது நின்ற போது அக்குழந்தைகள் கடவுள் அருளினால் உண்மை தெரிந்து பாடிய பாடல்களும் இதில் உள. viii. 433/1925/II

O31,1

கறுப்பன் செட்டியார், சு. சி. கறு.

i. அகவல் (தொ. எ. 2763 பார்க்க): முதற்பதிப்பு; ii. விவேகானந்தா அச்சுக்கூடம், பொள்ளாச்சி; iii. 1923; iv. செ. மூ. எ. 1+1; vii. இந்நூலில் களத்தூர் ஐயனார்மீது பாடப்பெற்ற அகவற்பா ஒன்று உளது; viii. 446/1923/IV

O31,1

i. **சித்திவிநாயகர் அகவல்** (தொ. எ. 2763 பார்க்க): முதற் பதிப்பு; ii. விவேகானந்தா அச்சுக்கூடம், பொள்ளாச்சி; iii. 1923; iv. செ. மூ. ப. 4; v.......; vi......; vii. ஆலம்பற் றுப் புத்தூரணியில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் விநாயகர் மீது பாடப்பெற்ற அகவற்பா ஒன்றுலாகியது இந்நூல்; viii. 446/1923/iv. **031,1**

i. **சிவசுப்ரமண்யர் அகவல்** (தொ. எ. 3005 பார்க்க): முதற் பதிப்பு; ii. டி. எஸ். இராமாநுஜ ஐயங்கார், சென்னை; ஸ்ரீராமாநுஜம் அச்சுக்கூடம், திருவொற்றியூர், சென்னை; iii. 1925; iv. செ. மூ. ப. 6; v.......; vi.......; vii. சுப்பிரமணியரைத்துதித்துப் பாடும் அகவற்பாவாலாகிய நூல்; முருகனைத் துதிப்பதால் உடல் நோய் முதலியன நீங்குதலையும், மாதம், கிழமை இவற்றைப் போற்றுமாற்றையும் விளக்குகின்றது இந்நூல்; viii. 433/1925/II.

**031,1**

**சிற்றம்பலநாடிகள்**

i. திருச்செந்தூர் அகவல் (தொ. எ. 2264 பார்க்க): முதற் பதிப்பு; ii. தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட், சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1921; iv. செ. மூ. ப. 16; v.........; vi. ......; திருச்செந்தூர் சுப்ரமண்ய சுவாமிகள் மீது பாடிய அகவற்பா. சைவசித்தாந்த நுண்பொருள்களும் தத்துவங்களின் இயல்பும் நன்கு விளக்கப்பட்டுள்ளன; viii 748/1921/II.

**031, 1**

**நற்கீரதேவர்**

i. விநாயகர் அகவல்: (தொ. எ. 3005 பார்க்க): முதற் பதிப்பு; ii. டி. எஸ். இராமாநுஜ ஐயங்கார், சென்னை; ஸ்ரீராமா நுஜம் அச்சுக்கூடம், திருவொற்றியூர், சென்னை; iii. 1924; iv. செ. மூ. ப. 10; v.....; vi.....; vii. அருணகிரியாரைப் போலவும் ஔவையாரைப்போலவும் கருத்து மிகுந்து கவிமழை பொழிய அருள்புரிய வேண்டுமென இந்நூலாசிரியராகிய நற்கீரதேவர் விநாயகரிடம் வேண்டியிருப்பதால், இவர் அருணகிரிநாதர் காலத்துக்குப் பிற்பட்டவர் என அறியலாம்; viii. 433/1925/II. **031,1**

i. **பழனியாண்டவர் தோத்திரமென்னும் சிவசுப்பிரமண்யர் அகவல்** (தொ. எ. 3005 பார்க்க): முதற் பதிப்பு; ii. டி. எஸ். இராமாநுஜ ஐயங்கார், சென்னை; ஸ்ரீராமாநுஜம் அச்சுக் கூடம், திருவொற்றியூர், சென்னை; iii. 1925; iv. செ. மூ. ப. 8; v.......; vi.......; vii. சுந்தரானந்தன் என்னும் சோதி சுப்ரமண்யன் மேல் செந்தமிழில் பாடப்பெற்ற அகவற் பாடல்கள் கொண்டது; இதற்குப் பழனியாண்டவர் தோத்திரம் என்ற பெயரும் உண்டு; viii. 433/1925/II. **031,1**

**பூபால பிள்ளை, ச., மட்டுநகர்**

யாழ்ப்பாணத்து அரசடி விநாயகர் அகவல் (தொ. எ. 3021 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளை, திருமயிலாப்பூர் ; கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii. 1923 ; iv. செ. மூ. எ. 82 ; v. ......; vi. ......; vii. இது 1920 ஆம் வருடம் ஒருவர் கேள்விப்படி செய்யப்பட்டது; 82 அடிகளையுடையது ; viii. 1280/1923/I.

O31,1

## 894.8111 அங்கமாலை

**சுப்பிரமணிய அய்யர், ந.**

திருத்தணிகேசன் திருவங்கமாலை (தொ. எ. 3008 பார்க்க) : முதற் பதிப்பு ; ii திருப்புகழ்ச் சங்கத்தார், திருவல்லிக்கேணி, சென்னை ; நோபில் அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி, சென்னை ; iii. 1924 ; iv. செ. மூ. எ. 1+12 ; v.......; vi.......; vii. திருத்தணிகை முருகனிடம் தலை, கண் முதலிய உறுப்புக்களினால் அவனை வணங்கியும், கண்டும் பலவகையில் வழிபடுமாறு கவிஞர் கூறுகிறார். திருநாவுக்கரசர் பாடிய "தலையே நீ வணங்காய்" என்னும் பதிகத்தை அடியொற்றியது இப்பிரபந்தம் ; viii. 378/1925/I.

O31,1

## 894.8111 அட்டகம்

i. சுப்பிரமணிய ரட்டகம் (தொ. எ. 3005 பார்க்க ) : முதற் பதிப்பு ; ii. டி. எஸ். இராமாநுஜ ஐயங்கார், சென்னை ; ஸ்ரீராமாநுஜம் அச்சுக்கூடம், திருவொற்றியூர், சென்னை ; iii. 1924 ; iv. செ. மூ. எ. 1+8 ; v.......; vi,......; vii. சுப்பிரமணியரது அருள் வேண்டி அவர்மீது பாடப்பெற்ற தோத்திரப் பாடல்கள் எட்டுக்கொண்டது ; viii. 433/1925/II.

O31,1

## 894.8111 அந்தாதி

**அகஸ்திய மகாமுனிவர்**

2275. i. சடாக்ஷர அந்தாதி ஆறெழுத்தந்தாதி : முதற் பதிப்பு ; ii. டி. கோபால் நாயகர், சென்னை ; கோல்டன் எலக்ட்ரிக் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1922 ; iv. செ.மூ.உ.எ. 102 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இது சுப்பிரமணியரின் பேரில் ஆறெழுத்தந்தாதி கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களால் அமைந்துள்ள மூலமும் விரிவுரையும் கொண்ட புத்தகம்; ஆறு எழுத்து என்பது முருகனைக் குறிப்பதாகும்; ஆறெழுத்துக் களின் சீர்த்தியை விளக்கும் அந்தாதியாகிய நூல் என்பது பொருள். உரை இயற்றியவர் கண்டி கதிர்காமம் வேலாயுத சுவாமிகள் ஆவர் ; viii. 386/1923/IV.

O31,1

ளுகிய மகாத்மா காந்தியின் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகள் சில எளிய சிந்து மெட்டில் பாடப்பட்டுள்ளன. viii. 32/1922/I.
V44,1y7

3944. i. **திலகர் காந்தி தர்சனம்:** முதற் பதிப்பு; ii. பாரதாச்ரமம், சென்னை; ஹிந்து பிரசார சபை, சென்னை; iii. 1924; iv. உ. ப. 29; v. 12×10 செ. மீ.; vi. 0—1—0; vii. இந்தப் பாரத நாட்டின் க்ஷேமத்தின் பொருட்டுத் தமது வாழ்நாட்களை அடியோடு தத்தம் செய்திருக்கும் அவதார புருஷராம் திலகர் இறக்கின்ற தருவாயில் இவ்வுரையாடல் நடந்ததாகப் புனையப் பெற்றிருக்கிறது. மகாத்மா காந்தியின் வருகைக்காகக் காத்திருந்து அவரைத் தனது கண்போன்ற தேசத்தின் நலத்தினைப் பேணும் பணியினை ஒப்படைத்துப் பின் இறந்து விடுகிறுர் திலகர் என்ற செய்தி இந்நூலில் கூறப்பட்டிருக்கிறது. viii. 1396/1924/II.
V44,1y7

3945. i. **திலகர், காந்தி தர்சனம்:** இரண்டாம் பதிப்பு; ii. சிதம்பரம், மதுரை; எ. கெ. வி. பிரஸ், மதுரை; iii. 1924; iv. உ ப. 16; v. 14×11 செ. மீ.; vi. 0—1—0; vii. ஸ்ரீதிலகர் சாகும் தருவாயில் மகாத்மா காந்தியுடன் பேசிய உரையாடல்களின் தமிழாக்கம் இது. viii. 608/1924/IV.
V44,1y7

**பொன்னுசாமிப் பிள்ளை, பி. கே. என்.**

3946. i. மகாத்மா காந்தியின் ஜீவிய சரித்திரம்: **முதற் பதிப்பு;** ii. டி. வரதராஜுலு செட்டியார், மதுரை; ஸ்டார் பிரஸ், கும்பகோணம்; iii. அக்டோபர், 1921; iv. உ. ப. 16; v. 17×12 செ. மீ.; vi. 0—2—0; vii. மஹாத்மா காந்தியடிகளின் வரலாற்றைக் கூறும் நூல். எளிய உரைநடையில் ஆக்கப்பட்டுள்ளது. viii. 110/1921/IV.
V44,1y7

**மகாத்மா காந்தி**

3947. i. மகாத்மா காந்தியின் சிறைச்சாலை அனுபவங்கள்: முதற் பதிப்பு; ii. கணேஷ் கம்பெனி, சென்னை; தி கமர்ஷியல் பிரிண்டிங் அண்டு பப்ளிஷிங் கம்பெனி, சென்னை; iii. 1921; iv. உ. ப. 103; v. 19×13 செ. மீ.; vi. 0—8—0; vii. மகாத்மா காந்தி எழுதிய சிறைச்சாலை அனுபவங்கள் என்னும் ஆங்கிலப் புத்தகத்தின் தமிழாக்கம் இது. இந்தியாவில் ஒரே ஜனநாயகம் ஏற்படவேண்டுமெனில் சென்னை ராஜதானிக்கு அப்புறமுள்ளவர்கள் தமிழ் அறிய வேண்டுவதவசியம் எனக் குறிப்பிட்டுள்ளமை பாராட்டற்பாலது. எனது இவ்வனுபவங்களைப் படிப்பவர்கள் தேசபக்தியுள்ளவராய் நாட்டின் விடுதலைக்காகச் சாத்வீக எதிர்ப்பைக் கையாளுவார்கள் என்று முடிவுரையில் கூறியுள்ளார். viii. 595/1921/II.
V44,1y7

**3948.** i. **மகாத்மா காந்தியின் ஜீவிய சரித்திரம்:** *திருத்திய இரண்டாம் பதிப்பு;* ii. *பி. கே. என். பொன்னுச்சாமி* **பிள்ளை,** *மதுரை; காவலிம் பிரஸ், மதுரை;* iii. 1921; iv. உ. ப. 16; v. 17×13 செ. மீ.; vi. 0—2—0; vii. *மகாத்மா காந்தியின் வாழ்க்கைச் சுருக்கம் இதன்கண் அமைந்துள்ளது.* viii. 479/1922/II. **V44,1y7**

**3949.** i. **மகாத்மா மோகனதாஸ் கரம்சந்த் காந்தி:** *முதற் பதிப்பு;* ii. *சுதேசமித்திரன் ஆபீஸ், சென்னை;* iii. *டிசம்பர்,* 1920; iv. உ. ப. 116; v. 16×11 *செ.மீ;* vi. 0—8—0; vii......; viii. 70/1921/II. **V44,1y7**

**மாணிக்க நாயகர், சூளை**

**3950.** i. *மஹாத்மா காந்தி பாட்டு—முதற்பாகம்: முதற் பதிப்பு;* ii. *ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை;* iii. 1924; iv. *செ. மூ. ப.* 8; v. 21×14 செ. மீ.; vi. 0—1—0; vii. *கிழக்கு ஆப்ரிக்காவில் காந்தி செய்த நலத்தினையும் காந்தியின் ஒப்புயர்வற்ற குணங்களையும் கூறுவது இந்நூல். மகாத்மா காந்தி, இராட்டினம், பாலகங்காதர திலகர், அலி சகோதரர், லாலாலஜபதிராய் முதலியோரைப் புகழ்ந்து பாடிய மெட்டமைப்புடைய பாடல்களடங்கிய நூல் இது.* viii. 1793/1924/I. **V44,1y7**

**3951.** i. **மௌலானா முகம்மது அலி சரித்திரம்—முதற்பாகம் :** *முதற் பதிப்பு;* ii. *கே. ஜகதீசன் கம்பெனி, சென்னை; நோபிள் பிரஸ், சென்னை;* iii. 1921; iv. உ. ப. 83; v. 18×14 செ. மீ; vi. 0—8—0; vii. *சுதந்திரப் போரில் நின்ற முகமது அலியின் சுருக்கமான வாழ்க்கை வரலாறு 12 அத்தியாயங்களில் அமைந்துள்ளது. முகமத்அலி சகோதரர்களின் நிழற்படமொன்று இதன்கண் உள்ளது.* viii. 171/1922/I. **V44,1y7**

**ராஜகோபாலன், டி. கே., உறையூர், திருச்சி**

**3952.** i. *மகாத்மாகாந்தி: முதற் பதிப்பு;* ii. *சமாதானப் பிரியச் சங்கத்தார், திருச்சிராப்பள்ளி; செயின்ட் ஜே. ஐ. எஸ். பிரஸ், திருச்சி;* iii. *செப்டம்பர்,* 1921; iv. உ. ப. 31; v. 19×13 செ. மீ. vi...........; vii. *மகாத்மா காந்தியடிகளின் வாழ்க்கை, மற்றும் அவர்தம் போதனைகள் பற்றிக் கூறும் நூல். உரையாடல் முறையில் எழுதப்பட்டது. பதிப்பகத்தாரின் "சர்ச்லைட் சீரிஸ்" என்னும் தொகுதியில் ஆறும் புத்தகமாக வெளியிடப்பட்டது.* viii. 331/1921/IV. **V44,1y7**

**லக்ஷ்மிநாராயண ஐயங்கார், டி.**

**3953.** i. *ராஜபுத்திர வீரர்கள்: திருத்திய பதிப்பு;* ii. *ஹி. குமார சாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை;* iii, 1920; iv. *உ. ப.* 90; v. 19×13 *செ. மீ.;* vi. 0—6—0; vii. *பதினொரு ராஜபுத்திர வீரர்களின் வாழ்க்கையைச் சித்தரிப்பது. சித்தூரின் முழுமையான சரித்திரத்தை இதன் மூலம் உணரலாம் பிரதாப்ஸிங் நிழற்படத்துடன் கூடியது.* viii. 105/1921/IV. V44,1y7

**3954.** i. *ராஜபுத்திர வீரர்கள் ;* ii. *என். எம். எஸ். பிரஸ், சென்னை ;* iii. 1925 ; iv. *உ.ப.* 87 ; v. 18×13 *.செ.மீ. ;* vi. 0-6-0 ; vii. *இராஜபுத்திர வீரர்களின் வரலாற்றை விளக்கும் இந்நூலில் பிருதிவிராஜ், பத்மினி, ப்ரதாப்சிங், முதலியோரின் வாழ்க்கை வரலாறுகள் அடங்கியிருக்கின்றன. இது பாட புத்தகமாக அமைந்திருக்கிறது.* viii. 1022/1925/III. V44,1y7

**3955.** i. **லோகமான்ய பாலகங்காதர திலகர் :** *முதற் பதிப்பு ;* ii. *சுதேசமித்திரன் ஆபீஸ், சென்னை ; சுதேசமித்திரன் பிரஸ், சென்னை ;* iii. *செப்டம்பர்,* 1920 ; iv. *உ.ப.* 107 ; v. 17×13 *செ.மீ. ;* vi. 0-8-0 ; vii. *பாலகங்காதர திலகர் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாகக் கூறும் நூல் ; அட்டை முன் பக்கத்தில் பாலகங்காதர திலகர் அவர்களின் நிழற்படம் ஒன்று அமைந்துள்ளது. "சுதேசமித்திரன்" ஆபீஸினின்றும் வெளியிடப்பெற்றது.* viii. 74/1921/II. V44,1y7

3956. i. **லோகமான்ய பாலகங்காதர திலகர் :** *இரண்டாம் பதிப்பு ;* ii. *சுதேசமித்திரன் பிரான்சு பிரஸ், சென்னை ;* iii. *அக்டோபர்,* 1922 ; iv. *உ.ப.* 106 ; v. 17×11 *செ.மீ. ;* vi. 0-8-0; vii.........; viii. 194/1922/IV. V44,1y7

**வாஸுதேவன், வி. (மொ. து.)**

**3957.** i. *சேலம் சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரின் சிறை வாசம் ;* ii. *ஸ்வராஜ்யா கம்பெனியார், சென்னைப்பட்டணம் ; சுயராஜ்யா பிரஸ், சென்னை ;* iii. 1922 ; iv. *உ.ப.* 180 ; v. 18×13 *செ.மீ. ;* vi. 0-8-0 ; vii. *சக்ரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் சுதந்திரப் போராட்ட காலத்தில் வேலூர்ச் சிறையில் தாம் அனுபவித்தவற்றை இதில் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளார். ஆங்கிலத்திலிருந்த குறிப்புகளைத் தமிழில் திரு. வி. வாஸுதேவன் என்பார் மொழிபெயர்த்துள்ளார்.* **viii. 557/1922/IV.** V44,1y7

**ஜான்ஹெய்னஸ் ஹோம்ஸ், அமெரிக்கா**

3958. i. உலக சிரேஷ்டர் : முதற் பதிப்பு ; ii. தாலூக்கா காங்கிரஸ் சபையார், தென்காசி ; விநோதினி பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1922 ; iv. உ.ப. 39 ; v. 16×11 செ.மீ. ; vi. ........ ; vii. காந்திஜியின் போராட்ட வரலாறு கூறும் நூல். அமெரிக்க மாதா கோயில் குரு பாதிரியார் ஜான் ஹெய்னஸ் ஹோம்ஸ் என்பவர், காந்திஜியைப் பற்றி ஆற்றிய உரையின் தமிழ் மொழி பெயர்ப்பு. தென்காசித் தாலூகா காங்கிரஸ் சபை விளம்பர இலாகா வெளியீடு. viii. 352/1922/III.

V44,1y7

**ஜெயராம் நாயுடு, ம.க.**

3959. i. தேசபந்து விஜயம் ; முதற் பதிப்பு ; ii. செந்தமிழ்ச் சிந்தாமணிப் புத்தகசாலை, சென்னை ; நோபிள் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1925 ; iv. உ.ப. 140 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இது தேசத் தியாகி சித்தரஞ்சன்தாசர் அவர்களின் வாழ்க்கை வரலாறு, தொண்டு இவைகளைக் கூறும் கட்டுரை நூல். இந்நூலில் அழகிய ஏழு படங்கள் அடங்கியிருக்கின்றன. இந்திய நாட்டின் விடுதலை வரலாறும் சித்தரஞ்சன்தாசரின் அருந் தொண்டுகளும் இதில் விளக்கமாக எழுதப்பட்டுள்ளன. viii. 1036/1925/IV.

V44,1y7

**ஹோம்ஸ், நியூயார்க், அமெரிக்கா**

3960. i. மகாத்மா காந்தி : முதற் பதிப்பு ; ii. வி. நாராயணன் அண்டு கம்பெனி ; ஆரோரா பிரஸ் ; iii. ஜூன், 1922 ; iv. உ.ப. 50 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. ஒப்புயர்வற்ற உலகச் சிரேஷ்டர் மகாத்மா காந்திஜியின் வாழ்க்கை, தொண்டு, இவைகளைக் கூறும் நூல். காந்திஜியைப் பற்றி ரெவரண்டு ஜான் ஹெய்ன்ஸ் ஹோம்ஸ், நியூயார்க்கில் செய்த பிரசங்கங்களின் மொழி பெயர்ப்பே இந்நூல். காந்தியடிகளின் திருவுருவப் படத்துடன் கூடியது. viii. 95/1922/III.

V44,1y7

## 923.256 துருக்கிய அரசியல் தலைவர்கள்

3961. i. காஸிமுஸ்தபா கமால்பாஷா அவர்களின் ஜீவிய சரித்திரம் ; இரண்டாம் பதிப்பு ; ii இ. செ. முகமது இபுராகீம் ராவுத்தர், மதுரை ; கொண்டா பிரஸ் ; மதுரை : iii 1933 ; iv உ.ப. 83 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. இது, கமால்பாஷாவின் வாழ்க்கைச் சரித்திரத்தைக் கூறும் புத்தகம். அவர் பிறந்தது முதல் குடியரசுத் தலைவரானது

வரையிலுமுள்ள செய்திகள் இந்நூலில் அடங்கியுள்ளன. கமால்பாஷாவின் படம் முன் அட்டையிலும், வெளியிட்ட முகமது இபுராகீம் ராவுத்தரின் உருவப்படம் உட்பக்கத்திலும் அடங்கியிருக்கின்றன. viii. 1129/1923/IV. V44,1y7

**முகமது இபுராஹீம் ராவுத்தர், இ. செ., மதுரை**

3962. i. காஸி முஸ்தபா கமால் பாஷா ஜீவிய சரித்திரம் : முதற் பதிப்பு ; i. இ. செ. முகமது இபுராஹிம் ராவுத்தர், மதுரை ; ஷம்ஸியா பிரஸ், மதுரை ; iii. 1922 ; iv. உ.ப. 46 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. துருக்கி தேசிய சபையின் தலைவரான காஸி முஸ்தபா கமால் பாஷாவின் சுருக்கமான வாழ்க்கை வரலாறும் அவர் அவரது நாட்டிற்கும், மக்களுக்கும், மதத்திற்கும் செய்த தொண்டுகளும் இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. viii. 317/1923/I. V44,1y7

## 923.41 குற்றவாளிகள் வரலாறு

3963. i. செம்பலிங்க நாடார் கதை : முதற் பதிப்பு ; ii. ஜியார்ஜ் கென்னத், சென்னை ; டையோசீசன் பிரஸ், சென்னை; iii. 1924 ; iv. உ.ப. 66 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. இப்புத்தகத்தின் ஒரே நோக்கம் தப்பறையைக் காண்பிக்கும் நோக்கமாயில்லாமல் பாபத்தினின்று இரட்சித்துக் காத்துக்கொள்ளும் இயேசு ரட்சகரின் வல்லமையைப் பற்றியேயாதலால் மனிதன் மனிதனுக்கு விரோதமாய்ச் செய்த தீமையை வெகு அபூர்வமாய் மாத்திரம் இப்புத்தகத்தில் காணலாம். கிறித்துவக் கண்கொண்டு செம்புலிங்க நாடாரின் கதையினைத் தருவது. இடையிடையே கும்மி, சிந்து மெட்டுகளில் அமைந்த பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. செம்புலிங்காவும், காசியும் கிறிஸ்தவர்களான வரலாறு, காருண்யம்மாள் பராமரிப்பு, ஆங்கில அரசாங்கத்தின் பொய்யான குற்றச்சாட்டு முதலியன இந்த நூலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. viii. 1114/19124/II. Y : 45w

## 923.6 சமூகத் தொண்டர்கள்

**ஈசுரமூர்த்தியா பிள்ளை, மு. பொ., திருநெல்வேலி**

3964. i. வக்கீல் பண்டாரம் பிள்ளை என்னும் தி. செ. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் சரித்திரச் சுருக்கம் ; முதற் பதிப்பு ; ii. மு. பொ. ஈசுரமூர்த்தியா பிள்ளை, திருநெல்வேலி ; மீரானியா அச்சுக்கூடம், திருநெல்வேலி ; iii. ஜனவரி, 1924 ; iv. உ.ப. 97; v. 16×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. தி. செ. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் சரித்திரத்தை விளக்குவது. அவரது புகைப்படத்துடன் கூடியது. சிங்கம்பட்டி ஜமீனின் பொருளுதவியால் இந்நூல் பதிப்பிக்கப்பட்டது. திரு. செ.

சுப்பிரமணிய பிள்ளையவர்கள் கூரிய புத்தியும், சீரிய கல்வியும் சாந்த குணமும், பொது நல ஊக்கமும் இன்னோரன்ன குணங்களும் அமையப்பெற்று, "அன்புடையாரென்பும் உரியர் பிறர்க்கு" என்னும் பொய்யில் புலவர் பொருளுரைக் கெடுத்துக்காட்டாய் வாழ்ந்தார். தச்சநல்லூர் இலக்குமணப் போற்றி என்பார் இதற்கு முன்னுரை எழுதியுள்ளார். viii. 1436/1925/I. Y: 44w

**சுப்பிரமணிய ஐயர், எம். எஸ். & வேங்கடாசாரி, வி.சி.**

3965. i. சடையப்ப வள்ளல் : முதற் பதிப்பு ; ii. எம். எஸ். சுப்பிரமணிய ஐயர், சென்னை ; ஸ்ரீராமா பிரஸ், பிராட்வே, சென்னை ; iii. 1925 ; iv. உ.ப.+செ.மு.ப. 16 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. தமிழ்மொழியை வளர்த்த வள்ளல்களில் ஒருவரான சடையப்ப வள்ளலின் சரித்திரத்தைக் கூறுவது இந்நூல். கம்பனை வள்ளல் போற்றிய விவரமும் பாவாணருக்கும் பிறருக்கும் பாலுஞ் சோறும் பரிவுடன் அளித்து இரு நிதியும் ஈந்து வந்த விவரமும் இச்சரித்திரத்தில் காணப்படுகின்றன. viii. 438/1925/II.
Y: 44w

**வீரபாகு பிள்ளை, எம். இ.**

3966. i. ஈஸ்வரசந்திர வித்யாசாகரம் : முதற் பதிப்பு ; ii. எம். இ. வீரபாகு பிள்ளை, சென்னை; சச்சிதானந்த அச்சுக் கூடம், சென்னை ; iii. 1923; iv. உ.ப. 16; v. 18×15 செ. மீ.; vi. 0—2—0; vii. ஈஸ்வரசந்திர வித்தியாசாகரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் நூல் இது; viii. 664/1923/I.
Y: 44w

## 925 விஞ்ஞானிகள்

**ஸ்ரீனிவாச அய்யங்கார், பி.டி. (மொ.து.)**

3967. i. பொருளறிவு கண்டறிதலும் பொறிகளியற்றுவதிலும் வல்லோர் வரலாறு : முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1920; iv. உ. ப. 81; v. 18×13 செ. மீ.; vi. 0—8—0 ; vii. இந்நூலில் பல புதிய சாதனைகளைக் கண்டுபிடித்த விஞ்ஞானிகளைப் பற்றிய வாழ்க்கைச் சரித்திரம் ஆங்கில மொழியினின்றும் மொழி பெயர்த்து தரப்பட்டுள்ளது, பட விளக்கங்களுடன் கூடியது. viii. 102/1921/I.
A.

## 928.91733 இரசிய நாவலாசிரியர்கள்

**கிருஷ்ணசாமி சர்மா.**

3968. i. மகாத்மா காந்தியின் குரு டால்ஸ்டாய் : முதற் பதிப்பு ; ii. காங்கிரஸ் விளம்பர சபை, சென்னை ; பி. ஆர். ராம அய்யர் அண்டு கோ, சென்னை. iii. 1922 ; iv. உ.ப. 27 ; v. 18×13 செ.மீ. ;vi. 0–4–0; vii. மகாத்மாகுரு என்று போற்றிய உருஷிய ஞானி டால்ஸ்டாயின் வாழ்க்கை வரலாறும் அவரது உயரிய தத்துவங்களும் இதன்கண் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. viii. 21/1922/II. O31w

## 928.942 ஆங்கில அறிஞர்கள்

**சண்முகம் பிள்ளை, கே. பி.**

3969 i. ஆங்கில சிரோமணிகள் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1922 ; iv. உ.ப. 158 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. சிற்சில ஆங்கில அறிஞர்களின் வரலாறு, அவர்தம் தொண்டுகள் ஆகியன கூறும் நூல், மாணவர் பதிப்பு. உயர்நிலைப் பள்ளிகளில் துணைப் பாடமாக வைக்கத் தகுந்தது. வில்லியம் காக்ஸ்டன் முதலாகப் பதினொருவர் வாழ்க்கைச் சரித்திரங்கள் இதில் உள்ளன. viii. 584/1922/III. V56w

3970. i. **மைக்கேல் பாரடே** : முதற் பதிப்பு ; ii. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1921 ; iv. உ ப. 32 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. மைக்கேல் பாரடே என்ற ஆங்கில அறிஞரின் வாழ்க்கை வரலாறு தரப்பட்டுள்ளது. மாணவர் பதிப்பு ; ஆங்கில அறிஞர்கள் என்னும் நூல் வரிசையில் பதிப்பகத்தாரால் இரண்டாவதாகப் பதிப்பிக்கப்பெற்றது. viii. 86/1921/III. V56w

## 928.94811 தமிழ் நூலாசிரியர்கள்

**இரத்நேசுவரையர், வ.மு., உடுவில்**

3971. i. குமாரசுவாமிப் புலவர், அ, சரித்திரச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. வ. மு. இரத்நேசுவரையர், உடுவில் ; தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலை, காரைக்குடி ; iii. ஜூன், 1922 ; vi. உ.ப. 11 ; v. 17×12 செ.மீ. ; vi. ......; vii. தமிழ்ப் பெரியார் ஸ்ரீகுமாரசாமிப் புலவர் அவர்களின்

வாழ்க்கை, தொண்டு முதலியவை விளக்கும் சிறு நூல். அன்னாரின் ஞாபகார்த்தமாக வெளியிடப்பட்டது. இதனை எழுதியவர் குமாரசாமிப் பிள்ளையவர்களின் மாணவராவார். இம்மாணவர்க்கு ஆசிரியர் அளித்த யோக்கியதா பத்திரமும் இதன் இறுதியில் தரப்பட்டிருக்கிறது. viii. 275/1922/III.
O31w

**கடம்பவனசுந்தர நாயனார், பி. எஸ்., புதுக்கோட்டை (தொ.து.)**

**3972.** i. *கிருஷ்ண பிள்ளை, எச். எ., ஜீவிய சரித்திரம் : முதற் பதிப்பு ;* ii. பி.எஸ். கடம்பவனசுந்தர நாயனார், புதுக்கோட்டை, என். எம். எஸ். பிரஸ், சென்னை ; iii. 1924 ; iv. உ.ப. 56 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இரக்ஷணிய யாத்ரிகம் என்னுந் திவ்ய காவிய கர்த்தாவும் "கிறிஸ்தவக் கம்பன்" எனவும் "மகரிஷி" எனவும் புகழப்பெற்றவரும் மகாவித்துவானுமாகிய எச். ஏ. கிருஷ்ண பிள்ளையின் வாழ்க்கைச் சரித்திரத்தைக் கூறும் நூல் இது. இவர் 1827 முதல் 1900 வரையில் வாழ்ந்தவர். எச். எ. கிருஷ்ண பிள்ளை, அப்பாசாமிப் பிள்ளை, நாகர்கோயில் தேவதாசன் ஐயர், சத்தியநாதன் ஐயர், எச். ஏ. கிருஷ்ண பிள்ளையின் இல்லம், சாந்தோம் ஆலயம் முதலிய படங்கள் இந்நூலில் அடங்கியிருக்கின்றன. இவரது ஒரே சகோதரன், வித்வான் திரு இ. முத்தைய்ய பிள்ளை வரலாறும், இதில் இணைந்துள்ளது. இறுதியில் அனுபந்தமாக இரக்ஷணிய யாத்திரிகத்தின் சில கதைகளும் கொடுக்கப்பட்டுள. viii. 256/1924/III.
O31w

**கார்மேகக் கோனார், ஆ., மதுரை**

**3973.** i. *நல்லிசைப் புலவர்கள் ;* ii. இ. மா. கோபால கிருஷ்ணக் கோன், மதுரை ; எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை ; iii. 1925 ; iv. உ.ப. 174 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–14–0 ; vii. பழந்தமிழ்ப் புலவர்களாகிய பெருந்தலைச் சாத்தனார், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், கோவூர்க் கிழார், பெருஞ்சித்திரனார், பிசிராந்தையார், ஔவையார் ஆகியோர் வரலாற்றை எழிலுற வருணித்துள்ளது இந்நூல். மதுரையில் நான்காம் சங்கம் நிறுவிய பாண்டித்துரைத் தேவரின் அழகிய படமும் உரிமையுரையும் நூன் முகத்தை அழகுபடுத்துகின்றன. viii. 463/1925/III.
O31w

**3974.** i. *நல்லிசைப் புலவர்கள் : இரண்டாம் பதிப்பு ;* ii. இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன், புது மண்டபம், மதுரை ; எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை ; iii. ஆகஸ்ட், 1925, iv. உ.ப. 186 ; v. 18×13 செ.மீ.; vi. 0–14–0 ; vii. சங்க கால ஆறு புலவர்களின் வரலாறுகளும், புலமையும், சிறப்பும் அவர்தம் தமிழ்ப் பணியும், ஆராய்ச்சியுடனும் விளக்கத்துடனுங் கூறப்பட்ட உரைநடை நூல். viii. 602/1925/II.
O31w

**சுப்பிரமணிய சர்மா, நெ. ரா.; பசுமலை**

3975. i. கம்பர் சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. இ.மா. கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை ; iii. 1921 ; iv. உ.ப.+செ.மூ.ப. 121 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இதில் தமிழ்ப் புலவர் கம்பரது வாழ்க்கை வரலாறு ஆதாரங்களுடன் கூறப்பட்டுள்ளது. viii. 782/1921/II.
O31w

3976. i. கம்பர் சரித்திரம் : இரண்டாம் பதிப்பு ; ii. இ.மா. கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை ; மீனலோசனி பிரஸ், மதுரை ; iii. அக்டோபர், 1922 ; iv. செ.மூ.உ.ப. 126 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. மகாகவி கம்பரின் வரலாறு உரைநடையில் தரப்பட்டுள்ளது. அன்னாரின் கவிச் சிறப்பும், அவர் இயற்றிய செய்யுள்கள், காவியம் ஆகிய இவற்றில் சிலவற்றை மேற்கோள்களாகக் கொண்டு, விளக்கப்பட்டது. மாணவர் பதிப்பு. திரிசிரபுரம் தேசியக் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர் ம. கோபாலகிருஷ்ணன் எழுதிய முகவுரையுடன் கூடியது. இந்நூலில் எடுத்தாண்டுள்ள செய்யுள்களுக்குக் குறிப்புரை இதனிறுதியில் தரப்பட்டுள்ளது. viii. 138/1922/IV.

O31w

**செண்பகத்தம்மாள், காசிமேசர்புரம்**

3977. i. கிருஷ்ணபிள்ளையவர்களின் ஜீவிய சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. செண்பகத்தம்மாள், அம்பாசமுத்திரம் ; ஷண்முக விலாசம் அச்சாபீஸ், அம்பாசமுத்திரம் ; iii. 1924 ; iv. செ.மூ.எ. 84 ; v. 16×13 செ.மீ. ; vi. இலவசம் ; vii. காசிமேசர்புரத்தில் வாழ்ந்து வந்த செந்தமிழ்ப் புலவர் கிருஷ்ணபிள்ளையவர்களின் சரித்திரத்தை விளக்கும் பாடல் களும், அவர் இறந்த பின் பாடப்பெற்ற இரங்கற் பாக்களும் கொண்டது. சென்னை சட்டக் கல்லூரி பேராசிரியர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எழுதிய முன்னுரையும் அம்பாசமுத்திரம் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் திரு ஆர். அரிகரமையர், காசிமேசர்புரம், ஆசிரியர் திரு சொக்கலிங்கம் பிள்ளை ஆகியோர் தந்த சாத்துக் கவிகளுடனும் கூடியது. சேது சமஸ்தான வித்வான் ரா. இராகவையங்கார் முதலியோர் பாடிய சரம கவிகளின் தொகுப்பு ஈற்றில் அமைந்துள்ளது. viii. 337/1924/IV.

O31w

**செந்திநாயகம் பிள்ளை, தி. மு.**

3978. i. தண்டபாணி விஜயம்: முதற் பதிப்பு; ii. தி. மு. செந்திநாயகம் பிள்ளை, திருவமத்தூர்; பி. ஆர். ராம அய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. 1923; iv. செ. மூ.

ப. 106; v. 22×14 செ. மீ.; vi. ..........; vii. நூலாசிரியரின் ஆன்மீக அனுபவங்களை ஒன்று சேர்த்து இவ்வரலாற்று நூலில் தந்துள்ளார். இந்நூல் பூருவ பாகம், உத்தர பாகம் என இரண்டு பாகங்கள் கொண்டது; 536 (359+177) செய்யுட்கள் உள. சிரவணபுரம் இராமானந்த சுவாமிகள், கந்த சுவாமிகள், சுந்தர சுவாமிகள் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புக் கவிகள் பாடியுள்ளனர். viii. 42/1923/III.

O31w

**சொக்கலிங்க தேசிகர், எம்.**

. சதாசிவம் பிள்ளை அவர்களது வம்ஸாவளி: (தொ. எ. 885 பார்க்க): முதற் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலி, சென்னை; ஸ்ரீபாரதி அச்சுக் கூடம், சூளை, சென்னை; iii. 1920; iv. செ. மூ. எ. 1+54+1; v. ......; vii. தருமபுர ஆதீன மகாவித்துவான் திரு. எம். சொக்கலிங்க தேசிகர் அவர்களால் பாடப்பெற்ற சென்னை அமைஞ்சிக் கரையிலிருக்கும் திரு. ஜி. சாம்பசிவம் பிள்ளையவர்களின் வம்சாவளி இதன்கண் அடங்கியுள்ளது. viii. 712/1921/I.

O31w

**சோமசுந்தர தேசிகர்**

3979. i. பழந்தமிழ்ப் பெருமக்கள் வரலாறு: முதற் பதிப்பு; ii. வஸந்தா பிரஸ், மாயவரம்; iii. 1923; iv. உ. ப. 21; v. 18×12 செ. மீ.; vi. ...........; vii. பண்டைத் தமிழர் பெருமையையும் சிறப்பையும் கூறுவது இந்நூல். கடை எழு வள்ளல்களைப் பற்றியும் அறிமுகம் செய்யும் ஆசிரியர் அதிகமான் நெடுமானஞ்சியின் கல்வி, வீரம் முதலியன பற்றிப் பகுதி பகுதியாகப் பிரித்து இந்நூலில் கூறியுள்ளார். viii. 1495/1924/I.

O31w

**சோமசுந்தரம், சே.**

3980. i. தாயுமானவர்: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1923; iv. உ. ப. 15; v. 18×12 செ. மீ.; vi. 0-1-0; vii. தாயுமானவரது வாழ்க்கை வரலாற்றைக் கூறும் சிறுவர்க்கான நூல் இது. viii. 955/1923/II.

O31w

**தணிகாசல முதலியார், ஈ. ந.**

3981. i. தாயுமானவர்: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; டாடா பிரிண்டிங் பிரஸ், சென்னை; iii. 1923; iv. உ. ப. 92; v. 18×13 செ. மீ.; vi. 0-6-0; vii. தாயுமானவர் சரித்திரச் சுருக்கமும்

அவர் தம் பாடலின் ஏற்றமும், அவற்றின் இலக்கிய ஆராய்ச்சி முதலியன இதன்கண் இடம் பெற்றுள்ளன. தாயுமானவரின் தத்துவ ஆராய்ச்சியும், அவர்தம் பாடல்களின் இலக்கிய ஆராய்ச்சியும் நல்ல முறையில் தரப்பட்டிருக்கின்றன. திருச்சி மலைக்கோட்டைப் படத்தைம் இதில காணலாம். viii. 690/1924/I.

O31w

3982. i. **தமிழ் நாவலர் சரிதை**; ii. த. கனகசுந்தரம் பிள்ளை, திருக்கோணமலை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1921; iv. செ. மூ. உ. எ. 128; v. 18×13 செ. மீ.; vi. 0–12–0; vii. ஆதி முதல் 17 ஆம் நூற்றுண்டு வரை அவ்வப் பொழுது வாழ்ந்த சங்க காலத் தமிழ்ப் புலவர்கள் சிலரின் வாழ்க்கைக் குறிப்பும் அவர்தம் கவித்திறன் ததும்பும் அன்னுர் பாடிய சில கவிகளும் எடுத்துக்காட்டாகக் கொண் டது. அவரைப் புகழ்ந்த பாக்களும் தரப்பட்டுள்ளன. இது சுமார் 300 வருடங்களுக்கு முன் எழுதப்பெற்றது. கவி வீரராகவரின் காலத்திற்குப் பின் எழுந்தது என்பதற்குச் தக்க சான்றுகள் உள. இதனை இயற்றியவர் இன்னுர் எனத் தெரியவில்லை. viii. 91/1921/III.

O31w

**திருநாவுக்கரசு முதலியார், மணி.**

3983. i. புலவர் கதை: முதற் பதிப்பு; ii. கே. பழனியாண்டி பிள்ளை கம்பெனி, நோபில் பிரஸ், சென்னை; iii. 1923; iv. உ. ப. 151; v. 18×13 செ. மீ.; vi. 0–12–0; vii. இதில் கவி வீரராகவ முதலியார், பொய்யாமொழிப் புலவர், இரட்டைப் புலவர், காளமேகப் புலவர், படிக் காசுத் தம்பிரான், புகழேந்திப் புலவர் ஆகியோர் வரலாறுகள் கூறப்பட்டுள்ளன. அப்புலவர் வாழ்க்கை யோடு தொடர்புடைய பாடல்களும் ஆங்காங்கே தரப்பட் டுள்ளன. viii. 1039/1923/III.

O31w

3984. i. புலவர் கதை: இரண்டாம் பாகம்; ii. கே. பழனி யாண்டிப் பிள்ளை, சென்னை; பி. என். பிரஸ், சென்னை; iii. 1925; iv. உ. ப. 171; v. 18×13 செ. மீ.; vi. 0–12–0; vii. புலவர் கதை இரண்டாம் பாகமாகிய இந்நூலில் ஔவையார், கம்பர், ஒட்டக்கூத்தர், குமரகுருபரர், சிவப்பிர காசர் ஆகியோர் வரலாறுகளடங்கியிருக்கின்றன. இப்புலவர் களின் வாழ்க்கையில் நிகழ்ந்த குறிப்பிடத் தகுந்த நிகழ்ச் கள் இந்நூலில் விதந்தோதப்பட்டுள்ளன. viii. 1541/1925/III.

O31w

**நமச்சிவாய முதலியார், கா.**

3985. i. கம்பரும் சோழனும் (கல்வியே கருந்தனம்): திருத்திய பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1924; iv. உ. ப.+செ. மூ. ப. 35; v. 18×13 செ.மீ.; vi. 0-2-0; vii. "மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்" என்னும் உறுதிமொழியின் வாயிலாகக் கம்பன் வாழ்வில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு கல்வியின் சிறப்பை விளக்குவது இந்நூல். இனிய பாடல்கள் பல நூலில் இடையிடையே விரவி வருகின்றன. இந்நூலுக்கு "கல்வியே கருந்தனம்" என்ற பெயரும் உண்டு. viii. 1186/1925/I.

O31w

**நாராயணசாமி முதலியார், சி. கு.**

3986. i. இரட்டைப் புலவர் சரிதம்: முதற் பதிப்பு; ii. சுந்தர விலாஸம் அச்சுக்கூடம், ஈரோடு; iii. அக்டோபர், 1922; iv. உ. ப. 49; v. 19×13 செ. மீ.; vi. 0-6-0; vii. இடைக் காலத்தில் "இரட்டைப் புலவர்கள்" என்று புகழ்பெற்ற புலவர்களின் வாழ்க்கை வரலாறு கூறும் நூல். viii. 871/1922/IV. O31w

**முனிசாமிப் பிள்ளை, க.**

3987. i. வள்ளுவர் சரித்திரம்; முதற் பதிப்பு; ii. க. முனிசாமிப் பிள்ளை, சென்னை; பால சுப்ரமண்யஸ்வாமி அச்சுக்கூடம், சென்னை; iii. 1921; iv. உ. ப. 88.; v. 18×13 செ. மீ.; vi. 0-8-0; vii. முன்னர் வெளிவந்துள்ள நூல்களையும் கட்டுரைகளையும், குறிப்புகளையும், தனிப் பாடல்களையும் முக்கிய ஆதாரமாகக் கொண்டு இந்நூல் எழுதப்பெற்றுள்ளது. வள்ளுவர் காலம், இவருடைய பிற நாமங்கள் முதலியனவும் தரப்பெற்றுள்ளன. மாண்புமிக்க வள்ளுவரின் திருக்குறளை நன்கு கற்று அறிய வேண்டும் என்னும் வேண்டு கோளையும் இதன்கண் காணலாம். வள்ளுவர் சொரூப ஸ்துதி, வள்ளுவர் வரலாற்றுப் பா, திருக்குறட் சிறப்பு முதலியன இதன்கண் உள்ளன. viii. 1272/1921/I.

O31w

**விவேகானந்த முதலியார், சி. வே.**

3988. i. நக்கீர தேவர்: முதற் பதிப்பு; ii. மனோரஞ்சனி பிரஸ், சென்னை; iii. 1924; iv. உ. ப. 16; v. 18×12 செ. மீ.; vi. 0-1-0; vii. நெற்றிக் கண்ணைக் காட்டிய ஈசனை அஞ்

சாதாராய் நோக்கி "முற்றுநீர்க் கண்ணுனுலு மொழிந்த நும் பாடல் குற்றம் குற்றமே" என்றுரைத்த நக்கீர பெருமானாரின் தீரத்தினையும், தமிழ் மொழிப் பற்றினை யும் விளக்கிக் கூறும் நக்கீரரைப் பற்றிய வாழ்க்கை வர லாற்று நூலாகும் இது. viii. 1733/1924/I.

O31w

## 929·1 இந்திய முன்னோர்கள்.

**அனந்தநாராயணன் மா. (மொ. து)**

**3989.** i. திருநெல்வேலி தளவாய் முதலியார் குடும்ப வர லாறு: முதற் பதிப்பு; ii. ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம், மயிலாப்பூர், சென்னை; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. 1925; iv. உ. ப. 79; v. 19×13 செ. மீ.; vi. விற் பனைக்கு இல்லை; vii. தென்னிந்திய சரித்திரத்தில் மறந்து போன ஒரு பகுதியாகிய தளவாய் முதலியார் அவர்களது குடும்ப வரலாற்றை விளக்கும் ஒரு வரலாற்று நூல். மதுரை கோயில் ஆயிரங்கால் மண்டபத்திலுள்ள தளவாய் அரிய நாத முதலியாரது கற்சிலைப் படத்துடன் கூடியது. திரு நெல்வேலி ஜில்லா பிரகாசபுரம் ஸ்ரீமான் பி. ஜே. எம். குலசேகர ராஜ வர்கள் ஆங்கிலத்தில் தொகுத்து எழுதிய நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு. மொழி பெயர்ப்பாசிரியரின் தந்தை யார் அ. மாதவையர் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். viii. 1496/1925/I.

V44,1y7

## 938 கிரேக்க முன்னோர்கள்.

**சேஷ அய்யங்கார், தி. ரா., சென்னை**

**3990.** i. பூர்வீக கிரேக்கர்: முதற் பதிப்பு; ii. எம். ஆதி அண்டு கம்பெனி, சென்னை; சந்திரா பிரஸ், சென்னை; iii. 1922; iv. உ. ப. 176; v. 18×12 செ. மீ.; vi. 0-12-0; vii. எளிய நடையிலமைந்த வரலாற்று நூல். கிரேக்க தேசத் தின் இயற்கையமைப்பு, கிரேக்கரின் குடியேற்றம், கிரீஸ் தேசத்தின் ஆளுகை, ஸ்பார்த்த என்னும் இராச்சியம் விருத்தியடைந்த வரலாறு, ஸ்பார்த்தாவிலுள்ள குடிகளின் பகுப்பு, ஸ்பார்த்தர்களின் சமூக ஏற்பாடுகள், ஸ்பார்த்தர் களின் அரசியல், காறிந்த் இராச்சியத்தின் வரலாறு, சிர்ரியன் இராச்சியத்தின் சரித்திரம், அதேனு இராச்சியத் தின் வரலாறு, அதேனு இராச்சியமும் அதன் வல்லரசும் கிளேயாப்தினஸ், ஆர்காங்தீப்ஸ் இராச்சியங்களும், கிரேக்கரின் நிலைமையும், ஆசியா கண்டத்து இராச்சியங்கள் வர லாறு, டேரியஸ் என்னும் சக்கரவர்த்தி, சொர்க்ஸிஹஸ் சக்கிரவர்த்தி, பாரசீயப் படையெழுச்சிக்குப் பிற்பட்ட அதேனு இராச்சியத்தின் வரலாறு, பெர்க்கினது ஆட்சிக் காலம், பெலப் போனிஸ் மகாயுத்தம், ஒலையநகரஸ்

ஸ்பார்தாவின் ஏகாதிபத்தியம், தீப்ஸின் ஏகாதிபத்தியம், ஜேஸன் என்னும் வல்லரசன், மாஸிடோனியாவின் ஏகாதிபத்தியம் முதலியன நன்கு விளக்கப்பட்டுள்ளன. viii. 743/1922/II.

V5I,1y7

## 940.3 முதல் உலகப் போர்

**3991.** i. சிறுவர்களுக்காக எழுதிய மஹாயுத்தக் கதை; ii. ஆக்ஸ்போர்ட் யூனிவர்சிடி பிரஸ், மதராஸ்; டையோசிசன் பிரஸ், சென்னை; iii. 1921; iv. உ. ப. 36; v. 19×13 செ. மீ.; vi. 0-3-6; vii. 1914 முதல் 1919 வரை நடைபெற்ற முதல் உலகப் போரைக் குறித்த முக்கிய நிகழ்ச்சிகளின் தொகுப்பு. இரண்டு பாகங்களைக் கொண்டது. பட விளக்கங்களும் அமைந்துள்ளன. viii. 530/1922/I.

V1

## 942 இங்கிலாந்து வரலாறு

**இராமகிருஷ்ண சாஸ்திரி, வி., கும்பகோணம்**

**3992.** i. இங்கிலாந்து தேச சரித்திரச் சுருக்கம்: முதற் பதிப்பு; ii. வி. இராமகிருஷ்ண சாஸ்திரி, கும்பகோணம்; ஸ்ரீகோமளாம்பா அச்சுக்கூடம், கும்பகோணம்; iii. 1925; iv. உ. ப. 160; v. 19×13 செ. மீ.; vi. 1-0-0; vii. இங்கிலாந்து தேசத்தின் சரித்திரத்தைத் தமிழில் விளக்கும் நூல். இது பள்ளி மாணவர்களுக்குப் பயன்படும் வகையில் அமைந்த நூல். இங்கிலாந்தில் ஆங்கிலேயர் ஆட்சியின் தொடக்கம் முதல் கி. பி. ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பத்தொன்பது வரையிலும் உள்ள இங்கிலாந்தின் சரித்திரத்தைச் சுருக்கியும் விளக்கியும் கூறும் நூல் இது. viii. 362/1925/II.

V16

**ராஜரத்தினம் பிள்ளை**

**3993.** i. உவெம்பிலி பல்பொருட்காட்சி: முதற் பதிப்பு; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டியார், சென்னை; ஸி. எல். எஸ். பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1925; iv. உ. ப. 121; v. 18×13 செ. மீ.; vi. 0-10-0; vii. இங்கிலாந்தில் உவெம்பிலி என்னுமிடத்தில் நடைபெற்ற பல்பொருட் காட்சியின் அமைப்பு, நடப்புமுறை பற்றிக் கூறும் நூல். சென்னை மாநிலக் கலைப்பகுதி சிறப்பாக குறிக்கப்பட்டுள்ளது. புகைப் படங்களுடன் கூடியது viii. 22/1925/IV.

V561

## 954 இந்திய வரலாறு

**அயோத்திதாஸ் பண்டிதர், க., வல்லகாளத்தி நகர்**

**3994.** i. *இந்திர தேச சரிதை: முதற் பதிப்பு;* ii. பி. எம் ராஜரத்தனம், ஸ்ரீஸித்தார்த்த புத்தகசாலை, கோலார் கோல்ட் பீல்டு; பாரதி அச்சுக்கூடம், சென்னை; iii. 1925; iv. உ. ப. 184; v. 18×13 செ. மீ.; vi. 0-6-0; vii. புத்தர் காலத்துக்குப் பிற்பட்ட இந்திய தேசத்தின் சரித்திரத்தைக் கூறும் நூல். இது படங்களுடன் கூடியது. ஆசிரியரது புகைப் படமும் இதில் அச்சிடப்பட்டுள்ளது. viii. 1211/1925/II. V44

**3995.** i. *இந்திய சரித்திர ஸுலபமான பாடல்கள்: திருந்திய பதிப்பு;* ii. மாக்மில்லன் அண்டு கோ, சென்னை; டையோசிசன் பிரஸ், சென்னை; iii. 1923; iv. உ. ப. 100; v. 18×13 செ. மீ.; vi. 0-6-0; vii. புராண காலம் முதல் கி. பி. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தொன்று வரையுள்ள நிகழ்ச்சிகளை எளிய இனிய நடையிற் கூறும் நூல் இது. படங்களுடன் கூடியது. viii. 1526/1923/III. V44

**3996.** i. *இந்துதேச சரித்திரம்: புதிய திருத்திய பதிப்பு:* ii. மாக்மில்லன் அண்டு கோ. சென்னை; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை; iii. 1920; iv. உ. ப. 284; v. 18×13 செ. மீ.; vi. 1-0-0; vii. ஆரம்பப் பாடசாலைக்கும் மத்திய வகுப்புக்களுக்கும் ஆன சரித்திரப் பாடப் புத்தகம். படங்கள் பல கொண்டது. viii. 1169/1921/I. V44

**இரத்னம் பிள்ளை, ஜி., சென்னை**

**3997.** i. *இந்தியாவின் சரித்திரக் காட்சிகள்: முதற் பதிப்பு;* ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1921; iv. உ. ப. 104; v. 19×13 செ. மீ.; vi. 0-6-0; vii. முதற்படிவ மாணவர்களுக்கான பள்ளிப் பதிப்பு நூலாக வெளியிடப்பட்டது. அரசர்கள், தலைவர்கள் ஆகியோரின் வரலாற்றைக் கொண்டது. படங்களுடன் கூடியது. viii. 94/1921/III. V44

**3998.** i. *இந்தியாவின் சரித்திரக் காட்சிகள்: முதற் பதிப்பு;* ii. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1922; iv. உ. ப. 104; v. 19×13 செ. மீ.; vi. 0-6-0; vii. இந்திய வரலாற்றை சுருக்கமாகக் கூறும் நூல். பள்ளிப் பதிப்பு. முதல் படிவ மாணவர்க்கானது. படங்களுடன் கூடியது. viii. 55/1922/III. V44

3999. i. சிறுவர்களுக்கான இந்து தேச சரித்திரம்: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1921; iv. உ. ப. 140; v. 18×13 செ. மீ.; vi. 0-8-0: vii. இந்திய தேச வரலாற்று நூல். இரண்டாம் படிவத்துக்குரியது. பட விளக்கங்களுடன் கூடியது. viii. 87/1921/III.

V44

4000. i. சிறுவர்களுக்கான இந்து தேச சரித்திரம்: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1921; iv. உ. ப. 128; v. 18×13 செ.மீ; vi. 0-8-0; vii. சிறுவர்க்கான இந்திய வரலாறு. உயர் தொடக்கப் பள்ளிகளுக்கானது. இரண்டாம் படிவத்துக்குரியது. பட விளக்கங்களுடன் கூடியது. viii. 1348/1921/III.

V44

4001. i. சிறுவர்களுக்கான இந்துதேச சரித்திரம்— முதற் புத்தகம்: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1922; iv. உ.ப. 135; v. 19×13 செ.மீ; vi. 0-8-0; vii. இரண்டாம் படிவ மாணவர்க்கான சுதேச வரலாற்றுப் பாட நூல். படங்களுடன் கூடியது. பாடப் புத்தகக் குழுவினரால் அங்கீகரிக்கப் பட்டது. viii. 575/1922/III.

V44

4002. i. சிறுவர்களுக்கான இந்து தேச சரித்திரம்—முதற் பாகம்: திருத்திய பதிப்பு: ii. வி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1924; iv. உ.ப. 136; v. 19×13 செ.மீ.; vi. 0-8-0; vii. சிறுவர்களுக்கான நம் தேச சரித்திரத்தினைத் தருவது இப்புத்தகம். இது முதல் பாரத்திற்கான பாடத்திட்டத்தின்படி அமைந்த பாடப் புத்தகமாகும். படங்களுடன் கூடியது ஆதிகுடிகள் ஆரியர் வரலாறு தொடங்கி ஐரோப்பியர் இந்தியாவிற்கு வருவது வரையில் உள்ள வரலாறுகள் இதில் உள்ளன. viii. 155/1924/III.

V44

4003. i. சிறுவர்களுக்கான இந்து தேச சரித்திரம்—இரண்டாம் புத்தகம்: திருத்திய பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1924; iv. உ. ப. 132; v. 18×13 செ.மீ.; vi. 0-8-0; vii. எட்டாம் வகுப்புக்குரிய இந்திய சரித்திரப் பாடநூல் இது. அழகிய படங்களுடன் விளக்கமும் அடங்கியது. viii. 104/1923/I.

V44

4004. i. பாலர் இந்திய சரித்திர போதம்; முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1922; iv. உ. ப. 72; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0; vii.

வகுப்பிற்குரியது. இளவரசர் எட்டாம் எட்வர்ட் அவர்களின் நிழற்படமும், பட விளக்கங்களும் அமைந்துள்ளன. viii. 541/1922/I.

V44

4005. i. பாலர் இந்திய சரித்திர போதம்: திருத்திய பதிப்பு; ii வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1925; iv. உ. ப. 79; v. 18×13 செ.மீ.; vi. 0–5–0; vii. சென்னை மாநிலத்தில் அக்காலத்துக் கல்வி அமைச்சராகவிருந்த ஏ. டி. பாட்ரோ அவர்களுக்கு இந் நூல் சமர்ப்பணம் செய்யப்பட்டது. வரலாற்றில் சிறப்பாகக் கூறத்தக்க சில மன்னர்களின் சரிதங்களைக் கூறுவது; படங் களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1190/1925/I.

V44

4006. i. பாலர் ஸ்தல சரித்திரக் கதைகள்—சென்னப்பட்டணம்: திருத்திய பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1925; iv. உ. ப. 56; v. 18×13 செ.மீ.; vi. 0–4–0; vii. பள்ளிப் பிள்ளைகளுக்கு உதவும் வகையில் எழுதப்பட்ட சென்னப்பட்டணத் தின் ஸ்தல சரித்திரம் பற்றிய கதைகள் கொண்டது. படங் களுடன் கூடியது. சென்னை நகரில் உள்ள பல பழைய நிறுவனங்களின் வரலாறுகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. viii. 1185/1925/I.

V44

இராமசுவாமி ஐயர், பி. எஸ்.

4007 i. பாலர் இந்திய சரித்திரம்—முதற் புத்தகம்; முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை; எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை; iii. 1920; iv. உ. ப. 105; v. 18×13 செ.மீ.; vi. 0–7–0; vii. குழந்தைகளுக்கு ஆர்வம் உண்டாகும்படி வெளியிடப்பட்ட சரித் திரப் புத்தகம். பட விளக்கங்களுடன் கூடியது. viii. 629/1921/I.

V44

4008. i. பாலர் இந்திய சரித்திரம்—இரண்டாம் புத்தகம்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கோ., சென்னை; டையோசிசன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1921; iv. உ. ப. 140; v. 18×12 செ.மீ.; vi. 0–10–0; vii. இரண்டாம் படிவ மாணவர்க்கான வரலாற்று நூல். படங் களுடன் கூடியது. viii. 191/1921/IV.

V44

4009. i. பாலர் இந்திய சரித்திரம்—முதற் புத்தகம்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமி டெட், சென்னை; டயோசிசன் பிரஸ், சென்னை; iii. 1923; iv. உ. ப. 119; v. 19×13 செ.மீ.; vi. 0–7–0; vii. இது முதல் படிவத்திற்கான சரித்திரப் பாடப் புத்தகமாகும்.

அழகிய பல படங்களுடன் மாணவர் மனத்தைக் கவரும் முறையில் ஆரியர்கள் காலம் முதல் கி.பி. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தொன்று வரையிலுள்ள இந்திய சரித்திரத்தை இந்நூல் கூறுகிறது. viii. 804/1923/IV.

V44

**இராஜகோபாலன், தி. கி., உறையூர், திருச்சி**

**4010. i.** இளவரசரின் இந்திய விஜயம்: முதற் பதிப்பு; ii. சமாதானத்தை விரும்பும் சபையார், திருச்சிராப்பள்ளி; ஜனானுகூல பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. நவம்பர், 1921; iv. உ. ப. 18; v. 19×13 செ.மீ.; vi. 0–2–6; vii. இது வேல்ஸ் இளவரசரின் இந்திய விஜயத்தை விவரிக்கும் நூல்; உரையாடல் முறையில் எழுதப்பட்டுள்ளது. viii. 983/1923/I.

V44

**கார்மேகக் கவிஞர் & முத்துசாமி கோனர், விஜயமங்கலம்**

i. கொங்குமண்டல ஊர்த் தொகை (தொ. எ. 2455 பார்க்க); முதற் பதிப்பு; ii. தி. அ. முத்துசாமி கோன், திருச்செங்கோடு, சாது அச்சுக்கூடம், சென்னை; iii. 1923; iv. செ.மூ.ப. 21; v. . . ; vi.; vii. பழைய கொங்குநாடு சிறப்புற்றிருந்த காலம், அதன் எல்லை முதலியவற்றை விளக்குவது இந்நூல். கொங்கு மண்டலத்தில் அமைந்த இருபத்து நான்கு நாடுகளும், ஒவ்வொரு நாட்டிலும், அமைந்த ஊர்களின் தொகைகளும், கூறும் பாடல்களும் விளக்கங்களும் உள்ளன. தொண்டைமண்டலம் 24 கோட்டம் என்பதும் இங்கு கவனிக்கத்தக்கதாகும். viii. 1028/1923/II.

V44

**கிருஷ்ணஸ்வாமி சர்மா**

**4011. i.** தமிழ்நாட்டு வீரர் இராஜஇராஜ சோழன்; முதற் பதிப்பு; ii. ஞான போதினி பப்ளிஷிங் டெப்போ, சென்னை; இராமையர் அண்டு கம்பெனி; iii. 1923; iv. உ. ப. 96; v. 18×13 செ.மீ.; vi. 0–10–0; vii. "தமிழ் நாட்டு வீரர்" இராஜஇராஜ சோழனின் விரிவான வரலாறு இது தமிழின் பெருமையையும் தமிழ் வீரனின் சிறப்பையும் கூறும் நூல். அக்காலத்தில் நாட்டில் நடைமுறையிலிருந்த அரசியல் முறைகளையும் விளக்குகிறது. viii. 260/1923/IV.

V44

**கோபிநாத ராவ், து. அ., திருவனந்தபுரம்**

**4012. i.** சோழ வமிச சரித்திரச் சுருக்கம்: இரண்டாம் பதிப்பு; ii. தமிழ்ச் சங்கம், மதுரை; தமிழ்ச் சங்க முத்திராசாலை; மதுரை; iii. 1925; iv. உ. ப. + செ.மூ.ப, 114; v. 21×14 செ. மீ.; vi. 1–0–0; viii. இது, மதுரைத் தமிழ்ச் சங்கச் செந்தமிழ்ப் பிரசுர வெளியீட்டில் 26–ஆவதுவெளியீடாகும். ஆசிரியரது புகைப்படத்துடன் கூடியது. இது பல

4016. i. இந்து தேச சரித்திரக் கதைகள்—முதற் புத்தகம் : முதற் பதிப்பு ; ii. இந்தியன் பப்ளிஷிங் லிமிடெட், சென்னை ; பி. ஆர். ராமா அய்யர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. 1925 ; iv. உ. ப 74 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. ஐந்தாம் வகுப்பிற்குரியது. படங்களுடன் கூடியது. ஒரு தேசத்தின் சரித்திரத்தைப் படிப்பதற்குமுன் சரித்திர சம்பந்தமான கதைகளைப் படிப்பது சிறந்த முறை என்பதற் கேற்பச் சில சரித்திரக் கதைகளின் தொகுப்புக் கொண்டது இந்நூல். viii. 601/1925/III.

V44

4017. i. இந்து தேச சரித்திரம் ; ii. இண்டியன் பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை ; ஹக்ஸ்லி பிரஸ், சென்னை ; iii. 1925 ; iv. உ. ப. 151 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. கல்வி இலாகா பாடத்திட்டத்தை யொட்டி எழுதப்பட்ட எட்டாம் வகுப்புச் சரித்திரப் பாடநூல் இது. ஐரோப்பியர்கள் இந்தியாவில் வாணிபஞ் செய்ய வந்த காலம் முதல் இந்நூல் எழுதப்பட்ட காலம் வரையிலுள்ள இந்திய சரித்திரத்தை வகுப்புக்கு ஏற்றவாறு சுருக்கிக் கூறுகிறது. இப்புத்தகம் படங்களுடன் அமைந்துள்ளது. viii. 952/1925/III.

V44

**சுப்பிரமணிய ஐயர், எம். எஸ்., சென்னை**

4018. i. இராஜபுத்திர விஜயம்—முதல் பாகம் : முதற் பதிப்பு ; ii. மயில் வாகனன் கம்பெனி, சென்னை ; டி. வி. வி. பிரஸ், சென்னை ; iii. 1924 ; iv. உ. ப. 222 ; v. 18×13 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. இராஜபுத்திர விஜயம் அல்லது வீர புருஷர் சரித்திரம் என்பது இதன் முழுப்பெயர். இராஜ புத்திர வீரர்களையும் எழிலரசிகளையும் பற்றிக் கூறும் சரித்திர சம்பந்தமான புத்தகம். தேசிய மகாசபையின் திலகமெனத் திகழ்ந்த எஸ். சீனிவாச ஐயங்கார் நிழற்படமும் வேறு சில வண்ணப் படங்களும் இதில் இடம் பெற்றுள்ளன. viii. 45/1924/III.

V44

**சூரியநாராயண சாஸ்திரி, வை.**

4019. i. நமது பரதகண்டம்—முதற் பாகம் ; ii. தாருல் இஸ்லாம் புஸ்தகசாலை, சென்னை, கார்டியன் பிரஸ், சென்னை ; iii. 1925 ; iv. உ. ப. 264 ; v. 18×13 செ. மீ. ; vi. 1–14–0 ; vii. இ. மு. ஆறும் நூற்றாண்டுக்கு முன்னர் வாழ்ந்த சைசுநாதன் காலம் முதல், இ.பி. 16ஆம் நூற்றாண்டு வரையிலும் ஆட்சி செய்த இந்திய அரசர்களின் வரலாற்றை விளக்கிக் கூறும் நூல் இது. தேசப் படங்களும், இதரப் படங்களும் அமைந்தது இந்நூல். இதன் முதற்பாகம் ஆரிய சூரியன் என்றும், இரண்டாம் பாகம் அன்னிய நாட்டுக் கிரஹணம் என்றும், மூன்றாவது பாகம் விமோசனம் அல்லது சுயராச்சியம் என்றும் பெயர் சூட்டப்பட்டுள்ளன. நவசக்தி ஆசிரியர்

திரு வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் இதற்கு முன்னுரை எழுதியுள்ளார். உலக சரித்திரம், பிரபஞ்சதாரை அல்லது மானிடர் முன்னேற்றம். நூற் பெருக்கம் முதலியன நூலாசிரியர் இயற்றிய பிறநூல் களாகும். viii. 1504/1925/III.

V44

**செல்லப்ப சாஸ்திரி, டி. வி.**

4020. i. இந்து தேச சரித்திரம் : முதற் பதிப்பு : ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி ; டி. வி. வி. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1921 ; iv. உ. ப. 123 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-7-0 ; vii. மூன்றும் படிவ மாணவர்க்கான இந்திய வரலாற்று நூல். விளக்கப் படங்களுடன் கூடியது. பதிப் பகத்தாரின் வெளியீட்டு வரிசையில் இரண்டாம் புத்தகமாக வெளியிடப்பட்டது. viii. 172/1921/IV.

V44

4021. i. இந்து தேச சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி ; டி. வி. வி. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1921 ; iv. உ. ப. 164 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. இரண்டாம் படிவ மாணவர்க்கான இந்திய வரலாற்றுப் பாடநூல். விளக்கப் படங்களுடன் கூடியது. மூன்றும் புத்தகமாக வெளியிடப்பட்டது. viii. 173/1921/IV.

V44

4022. i. இந்து தேச சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. டி.வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை ; டி.வி.வி. பிரஸ், சென்னை ; iii. 1921 ; iv. உ.ப. 156 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. அரசினர் வெளியிட்ட பாடத் திட்டத்தை அனுசரித்து மூன்றும் படிவத்திற்கு எழுதப் பட்ட இந்திய வரலாறு. பட விளக்கங்களுடன் கூடியது. viii. 289/1922/I.

V44

4023. i. இந்து சேத சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. டி.வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை; டி.வி.சி. பிரஸ், சென்னை ; iii. 1924 ; iv. உ.ப. 58 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. அரசாங்கத்தார் வெளியிட்டுள்ள பாடத் திட்டத்தையொட்டி எழுதப்பட்டது. நான்கு, ஐந்து— வகுப்புக்களுக்குரியது. பட விளக்கங்களுடன் கூடியது. viii. 1400/1924/IV.

V44

**தாவுத்ஷா, பா., சென்னை**

4024. i. தாஜ்மகால் : ii. கார்டியன் பிரஸ, சென்னை ; iii. 1924 ; iv. உ.ப. 24; v. 18×13 செ.மீ. ; vi. 0–4-0 ; vii. உலகிலுள்ள மஹால்களுக்கெல்லாம் கிரீடம் போன்று விளங் கும் தாஜ்மஹாலின் பெருமையினையும் அமைப்பினையும் தெளி வாக்குவது இந்நூல். அழகிய படத்துடன் கூடியது. viii. 1193/1924/I.

V44

நடராஜன், வி.

4025. i. இந்திய சரித்திரம்—முதல் புஸ்தகம் : முதற் பதிப்பு ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ., சென்னை ; டயோசிசன் பிரஸ், மதராஸ் ; iii. ஜூன், 1922 ; iv. உ.ப. 126 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-7-0 ; vii. முதல் படிவ மாணவர்க்கான இந்திய வரலாற்றுப் பாட நூல். படங்களுடன் கூடியது. அரசினர் வகுத்த பாடத்திட்டத்தையொட்டி எழுதப் பட்டது. viii. 778/1922/II.

V44

4026. i. இந்திய சரித்திரம்—இரண்டாம் புஸ்தகம்: முதற் பதிப்பு; ii. ஜே. எ. யீட்ஸ & லாங்மன்ஸ் கிரீன் அண்டு கம்பெனி, சென்னை ; டயோசிசன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1922 ; iv உ. ப. 165 ; v. 19×13 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. இரண்டாம் படிவ மாணவர்க்கான வரலாற்று நூல். படங்களுடன் கூடியது. அரசினர் பாடத் திட்டத்தை யொட்டி எழுதப்பட்டது. viii. 253/1922/IV.

V44

4027. i. இந்திய சரித்திரம்—மூன்றும் புத்தகம் : முதற் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ., சென்னை ; டையோசிசன் பிரஸ் சென்னை ; iii. 1924 ; iv. உ. ப. 220 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-10-0 ; vii. எட்டாம் வகுப்பிற்குரிய சரித்திரப் பாட நூல் இது. போர்த்துக்கேஸியர், ஆங்கிலேயர், முகம்மதியர், இந்திய சுதந்திரப் போராகிய சிப்பாய்க் கலகம் முதலியவற்றை இந்நூல் விளக்குகிறது. படங்களும் அடங்கியது. viii. 588/1923/II.

V44

4028. i. இந்திய சரித்திரம்—மூன்றும் புஸ்தகம் : இரண்டாம் பதிப்பு ; ii. லாங்மன்ஸ், கிரீன் அண்டு கம்பெனி, சென்னை ; டயோசிசன் பிரஸ், சென்னை; iii. 1924 ; iv. உ.ப. 220 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-10-0 ; vii. சென்னை வித்தியா விசாரணைக் கர்த்தர் பிரசுரித்திருக்கும் மிடில் ஸ்கூல் ஸிலபஸை அநுசரித்து இந்நூல் இயற்றப்பட்டது. மூன்றும் பாரத்திற்கான சரித்திரப் பாடப் புத்தகம் இது. இந்நூலில் ஆங்கிலேயர் ஆட்சியினையும் சேர்த்து 1925 வரையுள்ள இந்தியா வின் சரித்திரம் கொடுக்கப்பட்டுள்ளது. படங்களுடன் கூடியது. viii. 967/1924/III.

V44

நடேச அய்யர், சி.கே., சிதம்பரம்

4029. i. இந்து தேச சரித்திரப் பாடல் சுருக்கம் : முதற் பதிப்பு : ii. சி.கே. நடேச அய்யர், சிதம்பரம் ; சரஸ்வதி விலாஸ் பிரஸ், மாயவரம் ; iii. 1924 ; iv. செ. மூ. ப. 32 ; v. 17×12 செ.மீ.; vi. 0-3-0 ; vii. பலவித இராக தாளங்களில் பாடசாலைச் சிறுவர்களும், சிறுமிகளும் எளிதில் பாடியறிய அமைந்திருப்பது. இந்தியாவின் எல்லை, பிரிவுகள்

ஆங்கில அரசாட்சியில் உண்டாயிருக்கும் நன்மைகள் போன்ற வற்றினைச் சிந்துக் கவி மூலமே விவரிக்கின்றது இந்நூல். viii. 1496/1924/III.

V44

நடேச அய்யர், எம்.எஸ்.

4030. i. திருச்சிராப்பள்ளியின் புராதன சரித்திரம் ; ii. அழகிரி சாமி நாயுடு அண்டு சன்ஸ், திருச்சிராப்பள்ளி ; செயிண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1924 ; iv. உ.ப. 50 ; . v 18×13 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. இந்நூல் திருச்சிராப்பள்ளியின் வரலாற்றை விவரிக்கின்றது. இராமாயண காலம் முதல் தற்காலம் வரை யில் திருச்சிராப்பள்ளியை ஆட்சி செய்த மன்னர்கள், திருச்சி ராப்பள்ளிக்குண்டான ஆக்க மாற்றங்கள் முதலியவற்றை விளக்குவது இந்நூல். viii. 231/1925/III.

V44

நடேச முதலியார், சி.மு., சென்னை

4031. i. ஆங்கில ராஜ விஜயம் : முதற் பதிப்பு ; ii. சி.மு. நடேச முதலியார், சென்னை ; சிவகாமி விலாச அச்சுக் கூடம், சென்னை ; iii. 1922 ; iv. உ.ப. 132 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. இந்தியாவில் ஆங்கில ஆட்சியின் தோற்றமும் அதன் வரலாறும், ஐரோப்பிய யுத்தத் தின் வரலாறும் வெற்றியும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியால் விளைந்த நன்மைகளும் விளக்கப்பட்டுள்ளன. viii. 461/1923/I.

V44

நமசிவாய முதலியார், கா.

4032. i. இந்துதேசச் சரித்திரக் கதைகள் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை : காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1921 ; iv. உ.ப. 152 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-7-0 ; vii. இந்திய வரலாறு விளக்கமாகக் கதை வாயிலாகத் தரப்பட்டுள்ளது. விளக்கப் படங்களுடன் கூடியது ; உயர்நிலைப்பள்ளி மாணவர் பொருட்டு எழுதப் பெற்றது. viii. 679/1921/IV.

V44

4033. i. இந்து தேசச் சரித்திரக் கதைகள் : திருத்திய பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1924 ; iv. உ.ப. 152 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-7-0 ; vii. நம் தேச சரித்திரத்தில் தோன்றும் மன்னர், மக்கள் முதலியோரைப்பற்றிய கதைகளை இந்நூலில் காணலாம் ஆரம்பப் பள்ளிகளுக்கான சரித்திரப் பாடப் புத்தகமாகவும் இது உள்ளது. பாட்டனார் பேரனுக்குச் சொல்லும் முறையில் இது அமைக்கப்பட்டுள்ளது. படங்களும் பல தரப்பட்டுள்ளன. viii. 153/1924/III.

V44

நாராயணசாமி அய்யர், ஆர். எஸ்.

4034. i. மதுரை நாயக்கர் வம்சத்தரசர்கள் : முதற் பதிப்பு; ii. எஸ். நாகராஜன், கல்வி பப்ளிஷிங் ஹவுஸ், மதுரை ; பார்ட்ஸ் வெல் பிரிண்டிங் அவுஸ், மதுரை ; iii. 1922 ; iv. உ.ப. 64 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. நாயக்கர் (கால வரையறையுடன் 1559 முதல் 1736 வரை) வரலாறு எளிய நடையில் படங்களோடு எழுதப்பட்டுள்ளது. இதன் மேலட்டை மதுரை எக்ஸெல்சியர் பிரசில் பதிப்பித்தது. திருவனந்தபுரம் உயர்நீதி மன்ற நீதிபதி சேஷய்யர் தந்த முகவுரையுடன் கூடியது. viii. 730/1922/II.

V44

பொன்னெல், ஒய்.ஜி.

4035. i. இந்து தேச சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. ஒய்.ஜி. பொன்னெல் ;; டைமண்ட் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ், 1921 ; iv. உ.ப. 100 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஆரம்பப் பள்ளி மாணவர்க்கான சரித்திரப் பாட நூல். விரிவான பொருளடக்கம், விளக்கப் படங்கள் ஆகியன இதன்கண் உள்ளன. viii. 713/1921/III.

V44

மார்ஸ்டன், இ.

4036. i. இந்திய சரித்திர ஸுலபமான பாடங்கள் : திருந்திய பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட், சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. 1920 ; iv. உ.ப. 99 ; v. 18×11 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. ஆரம்பப் பாடசாலைகளுக்கான சரித்திரப் பாடப் புத்தகம்; விஷயங்களை ஒவ்வொரு புத்தகத்திலும் மேன்மேலாக விரித்துணர்த்தலாகிய பொது மத்திய விதியை அனுசரித்து எழுதப்பட்டுள்ளது. பட விளக்கங்களுடன் கூடியது. viii. 108/1921/I.

V44

4037. i. இந்திய சரித்திர ஸுலபமான பாடங்கள் : திருந்திய பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி ; டையோசிசன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1921 ; iv. உ.ப. 100 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இந்திய வரலாற்று நூல் ; மாணவர் பதிப்பு ; படங்களுடன் கூடியது. இது தொடர்ச்சியான வரலாறு கூறுவதன்று ; பெயர்பெற்ற பெரியார்களுடைய வரலாறுகள் மாத்திரமே தரப்பட்டுள்ளன. viii. 984/1921/IV.

V44

4038. i. இந்து தேச கதா மஞ்சரி : முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கோ., சென்னை ; டையோசிசன் பிரஸ், சென்னை ; iii. 1923 ; iv. உ.ப. 108 ; v. 19×13

செ.மீ.; vi. 0–10–0; vii. இராமர், புத்தர், ராஜ புத்திரர், சுல்தான்கள், சிவாஜி, ஆங்கிலேயர் வருகை, கிளைவ், வாரன்ஹேஸ்டிங், ஆங்கிலேய அரசாட்சி முதலியவற்றைப் பற்றி படங்களுடன் விளக்கும் நூல் இது. பாடப் புத்தகமாக வைக்கும் நோக்குடன் இயற்றப்பட்டது. viii. 1191/1923/I.

V44

ரங்கசுவாமி அய்யங்கார், எஸ்.வி.

4039. i. இந்து தேச சரித்திரம்—முதல் பாகம்: மூன்றாம் பதிப்பு; ii. ஆக்ஸ்போர்டு யூனிவர்சிடி பிரஸ், சென்னை; டையோசிசன் பிரஸ், சென்னை; iii. 1923; iv. உ.ப. 125; v. 18×13 செ.மீ.; vi. 0–7–0; vii. இது நடுநிலைப் பள்ளிகளில் சரித்திரப் பாடப் புத்தகமாக வைப்பதற்கு எழுதப்பட்ட நூல். இராமாயண பாரத காலம் முதல் ஐந்தாம் ஜார்ஜ் காலம் வரையில் உள்ள இந்திய சரித்திர நிகழ்ச்சிகளைச் சுருக்கமாக விளக்குகிறது இந்நூல். viii. 1211/1923/II.

V44

ரங்கசாமி அய்யங்கார், டி.ஆர்.

4040. i. தஞ்சை தேச சரித்திரம்: முதற் பதிப்பு; ii. வி.எஸ். வெங்கடராமன் அண்டு கோ., கும்பகோணம்; பி.என். பிரஸ் சென்னை; iii. அக்டோபர், 1925; iv. உ.ப. 36; v. 18×13 செ.மீ.; vi. 0–3–0; vii. சோழ நாட்டின் சிறப்புடைய தஞ்சாவூர் மாவட்ட வரலாறு கூறும் நூல். படங்களுடன் கூடியது. உத்தம சோழன் காலத்துச் சிலாசாசனப் பகுதியொன்று இந்நூலின் ஒன்பதாம் பக்கத்தில் அமைந்துள்ளது. தஞ்சைத் தலைநகரிலிருந்து அரசாண்ட மன்னர்களின் வரலாறுகளைத் தொகுத்துத் தருகிறது இந்நூல். viii. 383/1925/IV.

V44

ராமசாமி அய்யர், ஜி.எஸ்.

4041. i. பாலர் இந்திய சரித்திரம்—மூன்றாம் புத்தகம்: மூன்றாம் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கோ., சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. 1922; iv. உ.ப. 132; v. 19×13 செ.மீ.; vi. 0–12–0; vii. அனுபவமிக்க உபாத்தியாயரால் இயற்றப் பெற்ற சரித்திரப் பாடப் புத்தகமாகும். இது படங்களுடன் கூடியது. ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி வியாபாரம் செய்யத் தொடங்கியது முதல் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தொன்றாம் ஆண்டு வரையிலுள்ள இந்திய சரித்திரத்தை விளக்குவது இந்நூல். viii. 479/1923/IV.

V44

**விவேகானந்தர், ஸ்வாமி**

**4042.** i. *கிழக்கும் மேற்கும் : முதற் பதிப்பு* ; ii. *சை.ந. பாலசுந்தரம் செட்டி, சென்னை ; கணேசா பிரஸ், சென்னை* ; iii. 1923 ; iv. *உ.ப.* 114 ; v. 19×13 *செ.மீ.* ; vi. 0–8–0 ; vii. *விவேகானந்தர், "கிழக்கும் மேற்கும்" என்ற தலையங்கத்துடன் வங்க மொழியில "உத்போதம்" என்ற பத்திரிகைக்கு எழுதிய கட்டுரையின் மொழி பெயர்ப்பு இது. இதனை மொழிபெயர்த்து இந்நூலாக வெளியிட்டவர் சுப்பிரமணிய சிவா என்பவர் ஆவார். இந்தியாவின் பரிசுத்தம் பற்றி, சுவாமிகள் மிகவும் புகழ்ந்திருக்கிறார்.* viii. 306/1923/II.

V44

**வீரராகவாச்சார்யர், கே.ஏ.**

4043. i. *இந்திய சரித்திரக் கதைகள் : முதற் பதிப்பு* ; ii. *லாங்மன்ஸ் க்ரீன் அண்டு கம்பெனியார், சென்னை ; டையோசீசன் பிரஸ், சென்னை* ; iii. 1924 ; iv. *உ.ப.* 128 ; v. 18×13 *செ.மீ* ; vi. 0–6–0 ; vii. *சரித்திரப் பாடத்திற்கான அடிப்படைப் பாடங்கள் சரித்திரக் கதைகளாக அமைய வேண்டும் என்னும் நோக்கத்துடன் இயற்றப்பெற்றது. சிறந்த தலைவர்களாக விளங்கியவர்களின் கதைகளைத் தெரிந்து எடுத்து இளைஞர்கள் மனதில் பதியும் படியாகக் கொடுக்கப் பட்டுள்ளது.* viii. 1602/1924/I.

V44

**வெங்கடராமய்யர், சி.ஆர்.**

4044. i. *ஜில்லா சரித்திரமும் சிவிக்ஸும்—திருச்சிராப்பள்ளி ஜில்லா: ஏழாம் பதிப்பு* ; ii. *சி.வி. வெங்டராமய்யர், ஸ்ரீரங்கம் ; வாணி விலாச பிரஸ், ஸ்ரீரங்கம்* ; iii. 1923 ; iv. *உ.ப.* 64 ; v. 18×13 *செ.மீ.*; vi. 0–5–0 ; vii. *திருச்சி மலைக்கோட்டை, உறையூர்க் கோவில், பல்லவர் குகை, விஜய நகர ராஜ்யம், பல்லவர் ஆட்சி, முகம்மதியர் ஆட்சி முதலிய வற்றைத் தேவையான இடங்களில் படங்களுடன் இந்நூல் விளக்குகிறது.* viii. 1277/1923/II.

V44

**ஜகதீச ஐயர், பி.வி., சென்னை**

4045. i. *ஜில்லா சரித்திரம்—செங்கற்பட்டு : முதற் பதிப்பு* ; ii. *வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை* ; iii. 1925 ; iv. *உ.ப.* 69 ; v. 18×13 *செ.மீ.* ; vi. 0–5–0 ; vii. *செங்கற்பட்டு ஜில்லாவின் சரித்திரத்தை விளக்குவது. இதில் படங்களும் உள்ளன*

இது திவான் பகதூர் எல். டி. சுவாமிக்கண்ணு பிள்ளையவர்களின் முகவுரையுடன் கூடியது. இந்நூலில் செங்கற்பட்டு மாவட்டத்தின் எல்லைகள், உட்பகுதிகள், இந்து, முஸ்லீம், டச்சு, ஆங்கிலேய ஆட்சிகளில் இம்மாவட்டம் அமைந்த வரலாறு முதலியவை தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. viii. 1179/1925/I.

V44

**4046.** i. ஜில்லா சரித்திரம்—சென்னப்பட்டணம்: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1924; iv. உ. ப. 56; v. 18×13 செ. மீ.; vi. 0-5-0; vii. சென்னப்பட்டணத்தின் வரலாற்றைக் கூறும் படங்களுடன் கூடிய புத்தகம். சென்னையில் உள்ள சில முக்கிய இடங்கள், கட்டடங்கள் போன்றவற்றின் சிறப்பும் இதில் கூறப்பட்டுள்ளது. படங்களுடன் விளக்கம் அமைந்தது. viii. 759/1925/I.

V44

**4047.** i. ஜில்லா சரித்திரம்—தஞ்சாவூர்; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; அண்டு ஸ்டாண்டர்டு பிரஸ், சென்னை; iii. 1925; iv. உ. ப. 72; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0; vii. இது தஞ்சாவூர் மாவட்டத்தின் சரித்திரத்தை விளக்கும் பாடப் புத்தகம். இந்நூல் தஞ்சாவூர் மாவட்டத்தின் வரை படம், திருவாரூர்க் கல் மடம், சரபோஜி மன்னர் உருவச் சிலை, கும்பகோணம் சாரங்கபாணி கோயில் முதலிய படங்களுடன் விளங்குகிறது. தஞ்சாவூர் மாவட்டத்தின் பூர்வ பீடிகை, தேச சரித்திரம், விசேஷ இடங்கள் முதலிய பிரிவுகளை உடையது. viii. 1631/1925/III.

V44

**4048.** i. ஜில்லா சரித்திரம்—திருச்சிராப்பள்ளி; ii. வி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1925; iv. உ. ப. 63; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0; vii. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின் தாலுக்காக்கள், பூர்வ பீடிகை, முக்கிய இடங்கள் முதலியவற்றை விளக்கும் பாட நூல் இது. ஸ்ரீரங்கம், திருச்சி முதலியவற்றின் படங்களடங்கியது; viii. 1636/1925/III.

V44

**4049.** i. ஜில்லா சரித்திரம்—தென் ஆற்காடு: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1925; iv. உ. ப. 57; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0; vii. படங்களுடன் கூடிய தென் ஆற்காடு ஜில்லாவின் சரித்திரம் கொண்டது இந் நூல். திவான்பகதூர் எல். டி. சுவாமிக்கண்ணு பிள்ளையவர்களின் புனைந்துரையுடன் கூடியது. மாவட்ட அமைப்பு, எல்லைகள், உட்பிரிவுகள், இடச் சிறப்புகள், பூர்வீக வரலாறு

முதலியவற்றுடன் விளக்கம் பெற்றிருக்கிறது. வரலாற்றுச் சிறப்புடைய செஞ்சிக்கோட்டை படங்களுடன் விளக்கப் பெற்றிருப்பது நூலுக்குச் சிறப்பைக் கொடுக்கிறது; viii. 1180/1925/I. V44

4050. i. ஜில்லா சரித்திரம்--மதுரை; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1925; iv. உ.ப. 68; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0; vii. மதுரை ஜில்லாவின் தாலூகாக்கள், அமைப்பு, முக்கிய இடங்கள் முதலியவற்றை விளக்கும் நூல் இது. படங்களும் அமைந்திருக்கின்றன; viii. 1632/1925/III. V44

**ஹயாவதான ராவ், சி.**

4051. i. தென்னிந்திய சரித்திரக் கதைகள்: இரண்டாம் பதிப்பு; ii. லாங்மன் க்ரீன் அண்டு கம்பெனி, சென்னை; டையோசிசன் பிரஸ், சென்னை; iii. 1925; iv. உ.ப. 92; v. 19×13 செ.மீ.; vi. 0-5-0; vii. அரசர் ஆசியரைப் பற்றி மட்டுமன்றி, கவிகள், சான்றோர்கள், ஜனங்கள் முதலியோரையும் மாணவர் அறிவதற்கான செய்திகள் இந் நூலில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இந்நூல் மாணவர்களுக்குச் சரித்திரத்தில் விருப்பம் உண்டாக்கும் வகையில் எளிய, இனிய நடையில் எழுதப்பட்டுள்ளது. இது ஹயாவதான ராவ் அவர்கள் எழுதிய நூலைப் புதுப்பித்து எம். எ. ராமசுவாமி ஐயங்கார் அவர்களால் எழுதப்பட்டது. ஆங்காங்கே அழகிய படங்களுடன் விளக்கம் பெற்றிருக்கின்றது viii. 901/1925/II. V44

**ஸ்ரீநிவாசையங்கார், சு.**

4052. i. பண்டைய தமிழரசர்: ii. இ. மா. கோபால கிருஷ்ணக் கோன், மதுரை; எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை; iii. 1925; iv. உ.ப. 127; v. 18×13 செ.மீ.; vi. 0-10-0; vii. முற்கால மன்னர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் ஆகியோர் வரலாற்றைச் சுருக்கி விளக்கும் நூல் இது. பொற்கைப் பாண்டியன், மனுநீதிச் சோழன், கோப்பெருஞ்சோழன், பாரி, குமணன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் முதலியோர் வரலாறுகள் இயம்பப்பட்டுள்ளன; viii. 464/1931/III. V44

**ஸ்ரீநிவாஸய்யங்கார், பி. தி., திருச்சிராப்பள்ளி.**

4053. i. இந்திய சரித்திரம்-முதல் பாகம்; முதற் பதிப்பு; ii. பி. தி. ஸ்ரீநிவாஸய்யங்கார், திருச்சிராப்பள்ளி; ஜனானுகூல அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி; iii. 1923; iv. உ. ப. 80; v. 19×13 செ.மீ.; vi. 0-12-0; vii. பழங் கற்கருவிக் காலம் முதல் குப்த மன்னர்கள் காலம் வரையிலுள்ள இந்திய சரித்திரத்தைக் கூறும் நூல் இது; viii 614/1923/II. V44

